For private circulation only

Book Post

https://christianhistoricalsociety.in/

# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்

விலை : ரூ 60 | திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும் | மார்ச் 2022 | இதழ் 22

## கீர்த்தனைக் கலைஞர்கள்

'புதிய சிந்தை, புதிய ஆசை புதுப்பித்தாக்கவே அதைப் புகழ்ந்து காக்கவே'





கிறிஸ்தவ
வரலாற்றுச் சுவடுகள்

**கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,**
கதவு எண் 2-2-3(4), வடக்குத்தெரு,
பங்களாச் சுரண்டை-627859,
தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)
04633 290401

மாத ஆய்விதழ் சந்தா விபரம்

| சந்தா விபரம் | உள்நாடு |
|---|---|
| தனிப்பிரதி | ₹ 60 + நன்கொடை |
| ஆண்டு சந்தா | ₹ 600 + நன்கொடை |
| ஐந்து ஆண்டு சந்தா | ₹ 3000 + நன்கொடை |

**சந்தாவை வங்கி கணக்கில் செலுத்த**

Bank : Federal Bank
Name : Tinnevelly Christian Historical Society
A/c Number : 1748 0200 0036 84
IFSC Code : FDRL0001748

https://christianhistoricalsociety.in

# ஆசிரியர் சுவடு

கிறிஸ்துவுக்குள் பிரியமான கிறிஸ்தவ வரலாற்று பிரியர்களுக்கு,

ஆண்டவரும் இரட்சகருமாகிய இயேசு கிறிஸ்துவின் இனிதான நாமத்தினாலே உங்கள் அனைவருக்கும் அன்பின் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். இரண்டு மாதங்களைக் கழித்து மூன்றாவது மாதத்திற்குள்ளாக கர்த்தர் நம்மை பிரவேசிக்கச் செய்திருக்கின்றார். அதற்காக கர்த்தருக்கு நன்றிகளைச் செலுத்துகின்றேன். தமிழ் மொழியில் மூன்று என்பது மிக சிறப்பான ஒரு இடத்தைப் பெற்றுள்ளது. முக்கனி, முத்தமிழ், முச்சங்கம். முப்பால் என்று பல அரிய காரியங்களைக் கொண்டது. நாம் ஆராதிக்கின்ற கர்த்தரும் மூன்றில் ஒன்றாய் இருக்கின்றார். எனவே இந்த மூன்றாம் மாதத்தில் முத்தமிழில் ஒன்றாகிய இசைத்தமிழில் ஒரு அங்கமாகிய கீர்த்தனைகளை, கிறிஸ்து இயேசு நாதரின் நாம் மகிமைக்காக இயற்றின கீர்த்தனைக் கவிஞர்களைக் குறித்ததான சிறப்பிதழாக வெளியிட்டிருக்கின்றோம். இவ்விதழில் **'கிறிஸ்தவ கீர்த்தனைக் கலைஞர்கள்'** என்ற தலைப்பில் ஆராய்ச்சிக் கட்டுரைகளும். சம்பவங்களும் துணுக்குகளும் கொடுக்கப்பட்டுள்ளது. இவ்விதழை வாசிப்பதோடு கூட நிறுத்திவிடாமல் உங்கள் நண்பர்களுக்கும், உறவினர்களுக்கும் அறிமுகப்படுத்த மிக அன்போடுகூட கேட்டுக் கொள்ளுகின்றேன்.

ஒவ்வொரு மாதமும் இவ்விதழினை வெளியிடுவதற்கு பெரும்பொருட் செலவு செய்துக் கொண்டிருக்கின்றோம். உங்களால் இயன்ற உதவிகளைச் செய்து, இவ்விதழ் வெளிவருவதற்கு உதவலாம். மாத சந்தா புதுப்பிக்காதவர்கள். புதுப்பித்துக் கொள்ளவும்.

அடுத்தமாத இதழுக்கு, **'மிஷன் கட்டிடங்கள் சொல்லும் வரலாற்றுக் கதை'** என்ற கருப்பொருள் தெரிவுசெய்யப்பட்டுள்ளது. உங்கள் பகுதியில் காணப்படும் பழைமைவாய்ந்த ஆலயங்களின் சிறப்பு கட்டிட நுனுக்கங்கள். மிஷன் சரித்திரம் சொல்லும் பழைய கட்டிடங்கள் போன்றவைகளின் வரலாற்று உண்மைகளை அனுப்பித்தாருங்கள். நீங்கள் அறிந்த உண்மைகளை மற்றவர்களோடு பகிர்ந்துக்கொள்ளுங்கள்.

நம் சங்கத்தின் மூலமாக அநேக புத்தகங்களை மறுபதிப்பு செய்து வெளியிட்டுள்ளோம். அவைகளை வாங்கி வாசித்து நாம் கடந்துவந்த பாதைகளைகளை அறிந்துக் கொள்ளுங்கள். உங்கள் பிள்ளைகளுக்கும், நண்பர்களுக்கும் அவைகளை பிறந்தநாள் மற்றும் திருமணநாள் பரிசாக வாங்கிக் கொடுத்து அவர்களையும் வாசிக்கும் பழக்கத்திற்கு கொண்டு வாருங்கள்.

இம்மட்டுமாக ஆதரவு அளித்துவரும் அனைத்து நல்லுள்ளங்களுக்கும் இயேசுவின் நாமத்தினாலே நன்றியினைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

மன்னா செல்வகுமார்
பதிப்பாசிரியர்


**வடிவமைப்பு**
**சுஜித் ரெக்ஸ்**
75388 12218

**பதிப்பாசிரியர்**
**மன்னா செல்வகுமார்**
91767 80001

**christianhistorical@gmail.com**



# மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர்

ஜே. பர்னபாஸ்,
சேலம் வரலாற்றுச் சங்கம்

### பிறவி எடுத்த நோக்கம்

வட மொழியிடமிருந்து தமிழை மீட்பது என் வாழ்க்கை குறிக்கோள்! **"தமிழ் திராவிடத்திற்குத் தாயும், ஆரியத்திற்கு மூலமும் என்னும் உண்மையை உலகமறிய, மேலையறிஞர் ஒப்ப நாட்டவே இறைவன் என்னைப் படைத்திருக்கிறான்!"** என்று முழங்கினார். 1981 ஆம் ஆண்டு நிகழ்ந்த 5ஆம் உலகத் தமிழ் மாநாட்டு விழா மேடையிலே **'மாந்தன் தோற்றமும் தமிழர் மரபும்'** பற்றிய ஆய்வுப் பேருரையின் நிறைவிலே மாரடைப்பு ஏற்பட்டு இதுவே என் பிறவியின் நோக்கம் என்பதுபோல இயற்கையுற்றார் தேவநேயர். பாவாணர் தம் பிறவி நோக்காகக் கூறியவற்றை நிறைவேற்றி முடித்தாரா? என்றால் ஆமாம் அப்படியே நிறைவேற்றி முடித்தார் என்பதே குறைவற விளங்கும். மாந்தன் பிறந்ததும் மறைந்த குமரிக் கண்டமே என்பதும், அவன் பேசிய மொழி தமிழே என்பதும், தமிழே உலக முதல்மொழி என்பதும், தமிழே திராவிடத்திற்குத் தாய் என்பதும், தமிழே ஆரியத்திற்கு மூலம் என்பதுமான இக்கொள்கைகளை நிலைநாட்டுவதையே தம் வாழ்வின் குறிகோளாக கொண்ட தேவநேயர் தான் எழுதிய தமிழ் இலக்கிய வரலாற்று நூலின் முன்னுரை குமரிக்கண்ட ஆய்வாகவே விளங்குகிறது. தமிழே உலகின் முதல் மொழி என்பதையும், அதுவே திராவிடத்தின் தாய் என்பதையும் நிலைநாட்ட **'முதல் தாய்மொழி'**, **'ஒப்பியன் மொழிநூல்'**, 'The Primary Classical Language of the World ', மற்றும் **'திரவிடத் தாய்'**, போன்ற நூல்களை எழுதினார். தமிழ்தான் வடமொழிக்கும் மூலம் என்பதனை நிலைநாட்ட அவர் எழுதிய நூல்தான் **'வடமொழி வரலாறு'**.

மதுரை 5 ஆம் உலகத் தமிழ் மாநாட்டில் பங்கேற்போது மரணத்தை தழுவிய தேவநேயரின் பூதஉடல் சென்னை கீழ்பாக்கம் கிறிஸ்தவ கல்லறைத் தோட்டத்தில் தமிழுலக படைசூழ நல்லடக்கம் செய்யப்பட்டது. கடந்த 21-1-2021 அன்று எனது சித்தி திருமதி. வசந்தா ஜார்ஜ் கருணாகரன் அவர்களின் அடக்க ஆராதனையில் பங்கேற்க சென்னை கீழ்பாக்கம் கிறிஸ்தவ கல்லறைத் தோட்டத்திற்குச் சென்ற நான் அடக்க ஆராதனை முடிந்த கையோடு தேவநேயரின் கல்லறையில் அஞ்சலி செலுத்த அவரது கல்லறையைத் தேட முற்பட்டபோது, உதவியாக வழிசொன்ன கல்லறைத்தோட்ட காவலாளி சொன்ன வழியில் மரங்களின் நிழலில் அங்கே அவரது கல்லறையைக் கண்டேன். கல்லறையிலும் அவர் தனது பிறவியின்

நோக்கங்களை பறைசாற்றிக் கொண்டிருக்கிறார்.

**சேலத்தில் சிறந்த மொழிஞாயிறு :**

இன்று சேலம் அரசு கலைக் கல்லூரி என அழைக்கப்படும் அன்றைய சேலம் நகரவைக் கல்லூரியில் 1944 ஆம் ஆண்டு தொடங்கி 1956 வரை 12 ஆண்டுகள் தமிழ் விரிவுரையாளராக, தமிழ் உதவிப் பேராசிரியராக, தமிழ் பேராசிரியராக, தமிழ்துறைத் தலைவராக, தேவநேயர் பணியாற்றிய காலங்கள் ஒரு பொற்காலம் என்றே சொல்லலாம். அப்பொழுது கல்லூரி வளாகத்திலே உள்ள இல்லத்தில் அவர் தங்கி வாழ்ந்து வந்தார். அன்று இவர் பணியாற்றிய இன்றைய சேலம் அரசு கலைக் கல்லூரி 'சேலம் மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அரசு கலைக் கல்லூரி' என்று தேவநேயர் நினைவாக பெயர்சூட்டப்பட்டால் அது அவரது புகழுக்கு புகழ்சேர்க்கும் என்பதே சேலம் வரலாற்றுச் சங்கத்தின் வேண்டுகோள்.

சேலம் நகரவைக் கல்லூரில் தான் சிறந்திருந்த காலங்களைப் பற்றி தேவநேயர் எழுதிய பாடலே சாட்சி:

'சேலம் கல்லூரி சிறந்த இராமசாமி இன்றேல்
ஞாலம் பரவும் தமிழ் ஆராய்ச்சி – நூல் இயற்றும்
தேவநேயன் எங்கே? தென்மொழித் தொண்டன் எங்கே?
பாவு தமிழ் மீட்பெங்கே பார் !'

**பாவாணரின் இசைப் புலமை :**

தேவநேயரின் இசைப் புலமைக்கு சாட்சியாக விளங்குவது அவர் 1966ல் எழுதிய 'இசைத் தமிழ் கலம்பகம்' பாவாணர் யாழையும், முழவையும் கற்றவர்; தெலுங்கு பாடல்களின் சுந்தர இசையிலும், நாடக இசை பாடல்களிலும் தேர்ந்தவர். 305 பாடல்கள் கொண்ட இசைத் தமிழ் கலம்பகத்தில் பல்லவி, அனுபல்லவி, சரணம், தாளம், மற்றும் பாணி ஆகியவை பற்றி தெளிவாக விளக்கியுள்ளார். இது அவரது இசைப் புலமைக்கு சாட்சி சொல்லும் கலம்பகம்.

**தேவநேயப் பாவாணரின் கிறிஸ்தவ கீர்த்தனம் :**

கிறிஸ்தவ கீர்த்தனைகளின் தொகுப்பான இந்த நூல் 1981 ஆம் ஆண்டு வேதாகம மாணவர் பதிப்பாக வெளியிடப்பட்டது. இந்த நூலிலுள்ள கீர்த்தனைகள் அனைத்திற்கும் இராகம், தாளம் கொடுக்கப்பட்டுள்ளது. தியாகராஜருடைய கீர்த்தனைகளின் மெட்டுகளில் பல கீர்த்தனைகள் உள்ளன. நாட்டுப்புற தெம்மாங்கு, சிந்து, மெட்டுகளிலும் கீர்த்தனைகள் உண்டு. கடவுள் வாழ்த்து தொடங்கி ஆட்டுக் குட்டியானவரின் திருக்கல்யாணம் முடிய 28 தலைப்புகளில் கடவுள் வாழ்த்து நீங்கலாக 51 கீர்த்தனைகள் உள்ளன. இறை இயேசுவின் வாழ்க்கை சரிதை முழுமையாக இந்த நூலிலே பாடப்பட்டுள்ளது. இயேசுவின் சிலுவைப் பாடுகள் இந்த நூலில் பெரும்பகுதியை வியாபித்துள்ளது.

'தமிழ் கற்றதாலும், இசைப் பாட்டும் செய்யுளும் இயற்றி வந்ததாலும், இசைத் தமிழ்ப் பித்தன் ஆனதாலும்', என்று தனது இசை நேசத்தை அறிவிக்கும் தேவநேயர் வாய்ப்பும், வரவேற்பும் வாய்த்திருந்தால் ஒரு முழுநேர கிறிஸ்தவ கீர்த்தனைக் கவிஞராக மாறியிருப்பார் என்றே எண்ணத் தோன்றுகிறது. நல்ல தமிழில் கிறிஸ்தவ வேத நூலான பரிசுத்த வேதாகமத்தை மொழிபெயர்த்து தமிழ் கிறிஸ்தவத்திற்கு நல்கும் பேராவலும் அவர் கொண்டிருந்தார் என்பதையும் அறிய முடிகிறது.

'மறு உடையும் இல்லாமல் வறுமை கொண்ட தெய்வம்!
தினந்தினமும் நடந்து பதம் தேய்த்து இளைத்த தெய்வம்!
சிரம் சாய்க்க இடமின்றிச் சிரமமுற்ற தெய்வம்!




இனம் சனமாய் பாவிகளை ஏற்ற பெருந் தெய்வம்!
ஈனருடன் விருந்துண்ட எளியவரின் தெய்வம்!
சின்னஞ் சிறியவருக்கு மிகச் சேவை செய்த தெய்வம்!
சீரடி கழுவியவர் செருக்கழித்த தெய்வம்!'

என்று கிறிஸ்துவின் கீர்த்தி சொன்ன பாவாணர் சேலத்திற்கும், சேலம் கிறிஸ்தவர்களுக்கும் பெருமைபெரும் புகழ்ச்சியானவர்.



**சபாபதிக் கண்ணி**

1. எங்கு மெழுந்தருளி யேகனாய் நின்ற வுன்னைப்
   பொங்கு முளத்தாற் புகழ்வேன் சபாபதியே.
2. கத்தித் திரியுமந்த காக்கைக்கு மூணளிக்க
   நத்தித் திரியுமந்த நாதன் சபாபதியே,
3. என்னையே நாடிவந்தென் னுள்ளம் கவர்ந்தெழுவா
   யுன்னையே நீடுழி யோதிற் சபாபதியே,
4. பத்தாய கற்பனையைப் பாராய் மடநெஞ்சே
   சித்தாய யேசுபிரான் சத்ன சபாபதியே.
5. கண்கண்ட கற்சிலையைக் கையெடுக்கக் கூடசுவனே
   விண்கண்ட ஏசு விளம்புஞ் சபாபதியே,
6. கற்ற பருள்விருந்தே கல்லா மருண்மருந்தே
   உற்றார் வினை தீர்வா ருண்மைக் சபாபதியே.
7. காடியமெய் ஞானகுரு ஞானவீட்டைத்
   தேடியமெய் மானிடரைத் தேடுஞ் சபாபதியே.
8. ஞானக் கலைவினோதா காடுக் குருநாதா
   தானமா யுக்தனையே தந்தாய் சபாபதியே.
9. ஓவியவான் காட்சிதனி லுன்மாட்சி கண்குளிர்ப்ப
   மேவியவான் மீட்சிதனின் மீள்வேன் சபாபதியே,
10. சியோனாம் கன்னி தன்னைத் தேடும் மணவாளா
    தியோனா மென்னைத்தான் றேடாய் சபாபதியே.

ஐயனியவுளிறையனார்




திருநெல்வேலி
திருச்சபை குறித்து கவிஞரின்

# சபாபதிக் கண்ணி

ஸ்ரீதரன்




**விளக்கவுரை :**

எங்கும் எழுந்தருள் தெய்வம் எங்கும் உளன். தனி முதல் அவனே. அடி அவனே. மனி அவனே. பொங்கும் உளம் அவனைக் கண்டால் உண்டயாண்டும் அவன் ஒளி பரவியிருத்தலை உணரலே அவனைக் காண்டல் என்பேம் உள்ளத்தில் பள்ளி கொள்வான் அவன், உயிர் இனம் உவகை பூப்ப உள்ளத்தின் கண் இன்பமாய்ச் சமைத்திடுவான். ஆதலின் உயிர் வாழ்நர் உலகை எய்தவர். இன்பத்துள் மூழ்குவர், சாலவும் புகழ்வர் என மொழியின் இழுக்கு இல்லை.

சபை என்பது குழுவாம். சற்குருமணி எம்பிரான் ஏசு பகவான் திருக்குழாம் சதி. எம்பிரான் பதி. திருக்குழாம் திருச்சபையே திருப்பதி எம்பெருமானே. திருச்சதியே திருச்சபை. அஃது நெல்லைச் சபையே, திருப்பதி எம்பிரானே. சதியும் பதியும் கூடி வாழ்தல் கண்டு கவிஞர் கண்ணி பாடினார். கண்ணியில் மலர் உண்டு. இச்சபாபதிக் கண்ணியிலோ பாமலர் உண்டு. பூமலர் வாடும். பாமலர் வாடாது. பாமலர் புகழ் படைக்கும். எம்பதியாம் ஏசுபிரான் நெல்லைச் சபைக்கு அதிபதி நெல்லைச் சபை அவன் தன் இன்பச்சதி,

காக்கை கத்தும். அஃது கருமை நிறம் வாய்ந்தது. அங்கும், இங்கும், எங்கும் காக்கை பறந்து திரியும், யாண்டும் பறக்கும், கண்ட சிறார் கல் வீசுவர். அதன் குரல் செவிக்கு இன்பம் பயக்காது. காக்கை பிணம் உகக்கும், பறவைகளில் இழிந்தது காக்கை தெய்வம் அதன்கண் - அன்பு பாராட்டுகின்றான், ஒரு பறவைக்கும் பரமன் ஊட்டுகிறான், எம் அரிய பரம தந்தை காக்கையைக் காக்கின்றான்; உணவு ஊட்டுகிறான். எம்பெருமான் காக்கை உணவுகொள்ள விழைகின் முன், அஃது ஊண், உறக்கம் கொள்ள விழைந்து திரிவான் எம் ஐயன். ஊண் கொள்ள காக்கை கத்தித் திரியும். காதன் உயிர் இனம் உண்டுவாழ விழைகின்றான், எம்மை எற்றுக்குக் கைவிடுவான்? எம்மை காவானே அவ்வுயிரில் யான் ஒருவன் இல்லையோ? எவ்வுயிரும் காக்க ஒரு ஈசன் உண்டன்றோ ! நெஞ்சே! அஞ்சேல். உன் துயர் தவிர்.' என்பதூஉம் அங்கு கரந்து உறையும் பொருள் ஆகும்.

மானிடனை நாடி வந்தான் விண் நாடு உடைய வள்ளல். அவன் அன்பு எஞ்ஞான்றும் அணித்தே விழைவார்க்கு ஆதரவாய் உள்ளது. அவனை நெடி துநாள் புகழ்வார்க்கு, அன்னார் உள்ளம் இறும்பூது எய்த ஆண்டு தோன்றுவான். என்னை? நினைப்பார்க்கு நினைத்த வடிவாய்த் தோன்றி அருள் செய்வான் அத்திருவருட் செல்வன், உருகி உருகி மெய் புளகிக்க, இருகை தலைமேற்குவிய, நாத்தழுதழுக்க, உணர்வு எய்திய உள்ளம் இன்பம் பிலிற்ற, கண்ணில் அருவி பெருக, கால் ஆனந்தக் கூத்து ஆட, தெய்வக் கூடத்தன் ஆய எம்பிரான் தன் இனக்கூத்தன் என மகிழ்வு எய்தி அவன் உளத்தே முளைத்து எழுந்து ஓங்கி வளர்வான். யான் என்பது தேய சோதிவானன் கிளைத்துப் பருத்து வேர்விட்டு ஒளிமயம் விளக்கச் செய்திடுவான், நெடுங்காலம் அவன் திருப்புகழ் ஓதுவதே அமையும்.

இறைவன் அளித்தருளிய கட்டளை பத்து உள. அவை திருமலை உச்சிதனில் உலகம் காக்கும் தலைவனாய இறைவன் தன் பெருந்திருவருளால் திருவாய் மலர்ந்து அருளப்பெற்றவை. உயர் பெருந்தகை முனிவர் மோசே பொறித்துள்ளவை தெள்ளிதின் உணர்த்திக்காட்டின சித்தன் ஸ்ரீ கிறிஸ்து பகவானே சித்துகொண்டு எதையும் மாற்றி அமைக்க வல்லான் அவன், உயர் திரு இரத்னக்கல்

அவனே. ஆதலின் ஈண்டு இரத்ன சபாபதி என்று எம் தலைவனை அழைக்கிறார் கவி.

கண்கண்ட தெய்வம் எம்பிரான் ஏசுபகவானே, பல் கோடி தெய்வம் நந்தமிழ் நாட்டில் உண்டு என விளம்புவர் பலர். அனைத்து உயிர்க்கும் பதி ஒருவனே. அவன் தன்னந்தனியனே. அவன் அல்லால் தெய்வம் இல்லை மதியிலா மானிடங்காள்! மற்றும் ஓர் தெய்வம் உண்டோ? எல்லாம் வல்ல இறைவன் மானிடர் உய்த்து உணரும் வடிவாய்க் காட்சி அளிப்பான் எம்பிரான் மூலம் இலங்கினான். அப்பெருமானே எம்பிரானாய் வந்தான், அவனை ஓர் உருப்படுத்தல் எத்துணை மடமை! "யாம் சிலை வணக்கம் செய்யோம். கற்சிலை கண்டச்கால் பலர் கை யெடுப்பார். ஆயினும் யாம் அங்கன் செய்யக் கூசுவோம்," என்கின்றனர் கவி விண்ணில் முத்திநகர் கண்டான் இவனே. வேறு யார் கண்டனர்? வேறு யாவர் இவ்வாறு முத்திக்கருக்கு மறுமுறை இவ்வுலகு புகுந்து அழைத்துச் செல்வதாக பன்னிருவருக்கும் திருவுளம் பற்றினன் எம்பெருமான் ஆண்டு கூட்டிச் செல்ல ஈண்டு மானிட உருவாய் பலர் அறியத்தகும் வழியில் சிலுவையில் நடனம் புரிந்தான் எம் நடன சபேசன். இவனே கன்மலை, இவனே கற்சிலை. இச்சிலை வணக்கம் செய்தான் வேறு சிலையை வணக்கான். வேறு தேவர் நாமம் வாயில் வழங்கான். வேதம் விளம்பும் சபாபதி இவனே. விண்கண்ட சபாபதி இவனே. கன்னிமருமான்; விழிமாண்பான் மண் உலகு வந்த பெருமான்; எமை ஆட் கொண்ட அப்பன் ஸ்ரீ கிறிஸ்து பகவானே.

கற்றார் உள்ளம் எம்பிரான் தோய்வான் அருள் விருந்து என அன்னார் உவகை பூப்பர். இறைவனை ஆயுந்தோறும் அவன் புதுமை இலக்கும். விருந்து அருந்துவது கொண்டாட்டம், மருந்து அருந்துவது திண்டாட்டம். கொண்டாட்டத்திற்கும் திண்டாட்டத்திற்கும் அவன் அருள் சுரந்து பெருகும். கற்றார்க்கு அவன் அருள் விருந்து. மற்றார்க்கு அவன் அருள் மருந்து. விருந்தும் மருந்தும் அவனே. கல்லார்க்கு நாளும் விருந்து அருந்த தன்னைத் தந்தான் அவன். பாவநேசனுக்குப் பாவநாசன் அவனே. பாவநாசன் பாவப்பிணி ஒழியுமாறு தன்னை மருந்தாய் அருந்தத் தந்தான். நேசன் விருந்து எம்பிரானே. நீசன் மருந்து எம்பிரானே. விருந்து இன்பம் படைக்கும். மருந்து துன்பம் துடைக்கும். படைத்தலும் துடைத்தலும் எம்பெருமானார் தம் திருத்தொழிலே. இன்பம் அளிக்கும் எம் தலைவன் அருள், துன்பம் அழிக்கும் எம் தலைவன் அருள், அவன் அருள் பெற்றார் அனைவரும் உற்றார். அவன் அருள் அற்றார் அனைவரும் அற்றார், அருள் உருவாம் இறைவன் ஏசுபெருமான், அவ்வண்ணல் தன் வண்ணத்தை என் என்று சொல்வேன்! துயர் தீர்க்கும்– பிணி தீர்க்கும் –வினை தீர்க்கும் – துன்பம் தீர்க்கும் பகவான் தன் அருள் அவன் அருள் பயப்படார் எல்லாம் எய்துவர். பேரும் பெரு வாழ்வும் எய்துவர். அவன் அருள் புகுவர்; அவன் அருள் அருந்துவர்; அவன் மயம் எய்துவர்: அவனுள் உய்வர் எவரும், விண்ணும் மண்ணும் அவனுள் இயக்குவன. அவன் அன்றி ஓர் அணுவும் அசையா. இஃது உண்மையே.

பண்டும் இன்றும் மெய்ஞானபுரம் போக மானிடர் விழைகின்றனர். மெய்ஞானபுரம் எங்கு உளது? அது விண்ணாடு நாப்பண் உள்ளது. மெய்ஞானபுரத்தே ஞானவீடு ஒன்று உண்டு. அவ்வீட்டில் ஞான குரு வாழ்கின்றார். அவரைத் தேடிச்செல்வர் மெய் மானிடர். அங்கு அவர் வீட்டின் கதவைத் தட்டினர். தேடினார் கண்டு அடைத்தனர். தட்டினார் திறந்ததைக் கண்டனர். கேட்டார் பெற்றனர். உண்மைக்கு இவனே – உயர்வுக்கு இவனே – பண்புக்கு இவனே – பயனுக்கு இவனே – மெய்ஞானபுரத்திற்கு இவனே – வழிக்கு இவனே – ஞான வீட்டிற்கு இவனே – ஞான குருவிற்கு இவனே – தேடுவார்க்கு இவனே – தட்டுவார்க்கு இவனே – கேட்பார்க்கு இவனே – ஆதியும் இவனே – அந்தமும் இவனே – முத்திக்கும் இவனே – சித்திக்கும் இவனே – எத்திக்கும் இவனே – எல்லாவற்றிற்கும் இவனே – மருந்தும் இவனே –விருந்தும் இவனே –நேசர்க்கும் இவனே – சேர்க்கும் இவனே – தேடுவான் இவனே – தேடுவார்க்கும் இவனே – ஆக்குதற்கும் இவனே – விக்குதற்கும் இவனே – சகலமும் இயங்குதற்கு இவனே. இவனே சபாபதி,

உலகுக் கலை ஒழியும், ஞானக்கலை அழியாது. கலை பிறக்கும் இடம் இவனே. கலைக்குப் பிறப்பிடம் எம்பிரானே. கலை தோற்றுவிக்கும் குணசீலன் இறைவனே. கலைவாணனும் எம் பரம தந்தையே. பல்கலைக் கழகமும் அமுதவாயனே. அருங்கலை வினோதமாய்ப் படைக்கும் தொழிற் கண் முனைந்து எழுந்து துலக்குபவன் எம் திருக்கண்ணனே, கலை படைத்து – இயற்கை படைத்து – பல இனம் படைத்து பிரமன் உருவாய்த் திகழ்த்திடுவான் எம் ஐயன். சற்குருநாதன் எம் பெருமான் மேசியாவே. உலகிடை மேவிய எக்குருவினுக்கும் – எந்த நல்ல ஆசிரியனுக்கும் மேம்பட்டு மிளிர்பவன் எம் குருநாதனே. சிலுவையாகக் கனல் தனில் தன்னை ஓர் முறை தானமாய் வழங்கினன், அவ் யாகம் செய்தற்குரிய திருமறியாக விளங்கினர். தூய்மைக்குப் பிறப்பிடமாய அவன் அன்றி அவ் யாகத்திற்கு உரியார் வேறு யாவர் உளர்? முதன் மானிடன் முதலாக, யாம் சறாக, அவ் யாகம் செய்தற்கு வேறு யாவர் தகுதி பெறுவார் ? அவனே வாய்மையும், தூய்மையும், நேர்மையும், நீர்மையும் கொண்டான். சேய்மைக் கண்ணும் அண்மைக் கண்ணும் அவனே என திரு வேதநூலும் தெரித்தல் காண்மின்,

வான மண்டலம் பேரழகு வாய்ந்தது. விசித்திரம் பொருந்தும் சோதி மண்டலம் சித்திரக் காட்சியை நிகர்க்கும். ஒவியக் காட்சி தெய்வ மாட்சியை விளக்கும், ஆபிரகாம் என்ற குலத்தலைவர் நடு நிசியில் எழுத்து வான் காட்சி நோக்கி நிற்க, சற்குணச் செல்வனாம் எமதிறைவன் அவன் சந்ததிதனை விண்மீன் ஒத்துப் பெருக்கி விளங்கிடச் செய்வதாகத் திருவாக்கும் அளித்தான். எம் பெருமான் கைவேலை அவன் மாட்சிதனை உணர்த்தும், அன்னான் மானிடனை ஒரு பொருட்டாக எண்ணுதற்கு மானிடன் எத்துணைச் சிறியன்! இக்கருத்து உணர்த்தும் சொற்கள் திருமறையில் பொறித்துள்ளன. பருதியின் மாட்சி, மதியின் மாட்சி, மீனின் மாட்சி கண் கவர்வன; உள்ளத்தை ஒருங்கே ஈர்ப்பன; மனதை மயக்குவன; உணர்வை இயக்குவன. வான் ஓர் நீலக்கடல், தண் மதியம் அன்று அலர்ந்த செந்தாமரை, இலக்கும் மீன்கள் ஆம்பற் பூக்கள். பூக்களில் தேன் சேர்த்தல் வண்டின் தொழில். மந்திரம் ஓதுவார் அடியார். அத் தொண்டர் கண்கள் வண்டுகள் ஒப்ப இறைமாட்சி என்னும் தேனைக் காட்சியிற் பருகுவன. தேனை உண்ட வண்டு தியங்கி, மயங்கிக்கிடக்கும்; பின்னர் மீளும், ஆனந்தக்கூத்து ஆடும் அன்பர் கண்கள் வான் உயர் மீட்சிதனை நோக்கி நிற்பன. அம் மீட்சி யாது?

அஃது வான் மீட்சியே. வான் மீட்சி என்றார் உயர் மீட்சி எனவும், விண்ணில் அமையும் மீட்சி எனவும் பொருள் கொண்டார் புலவர். மீட்சியைப்பற்றி உள்ளுவானேன் ? காட்சிதனில் மாட்சி

கண்டார் கவிஞர். வான் காட்சி மீன் காட்சி காட்டும், காட்சிக்குள் மாட்சி விண்டார். மாட்சிக்குள் மீட்சியை எதிர் நோக்குவார். ஈசன் கைப்பாட்டில் என்ன வினோதம் விளக்கும்! அம்மம்ம! பெரிது! பெரிது விண் அழகு விளம்புவது யாது? அம்மாட்சி விசித்திர வினோதனாய பாஞ்சோதி ஆண்டு உறையும் ஏற்றப் பெற்றியை உணர்த்தும், ஒல்லும் வகையால் உணர்த்த மீண்டும் கூறுதும், கேண்மின், உள்ளுவார் உள்ளத்துள் எல்லாம் உளன் ஈசன், உள்ளுந்தோறும் உண்மை உருவாய்த் தன்னை உள்ளுவார் திருவுளத்தே தோற்றிக் கோவில் கொள்வான். பள்ளி கொள்வான் கொன்னே இரான், உணர்வுச்சுடர்விட கருதரிய கருத்தாய் உளத்தே மேவுவான். அது காலை உணர்வு ஒன்றி இன்பம் மேலிடும். அன்புடைத் தலைவனாம் இறைவன் ஏசுபிரான் உளத்து இயக்கும் உணர்வை இயக்கும் வல்ல தொழிலாளி அதன் முதலாளியும் அவனே முதலாளியும் தொழிலாளியும் ஒன்றுசேரின் அவண் நிகழும் இன்பப் பெருக்கை என்னென்று இயம்புவது, 'இன்பப் பெருக்கே இறையே பராபரமே என வழங்கின் இழுக்கு; என்னை கொல்! இந்நிலை அடைந்த கவி என் அங்ஙனங் கூறார்? மானிடனை நினைத்தருள ஈசன் முன்னர் மானிடன் எத்துணை அற்பன்! மாந்தன் சாந்தனையும் சஞ்சலத்தில் காலங்கழிக்கின்றான், மேவிய வான் மீட்சி இறைவன் இயேசுபெருமானால் அளிக்கப்பட்டது. அன்புச் செல்வபதி திருக்கண்ணபிரான் அன்பால் என்பால் வந்தான். அவன் நம்மை அளித்துக்காப்பான். அம் மீட்சியை உலகு கண்டு உணருங்கொல்? கவி உணர்த்து பாடுவது ஒருவாறு கரியே. காட்சியுள் மாட்சியும், மாட்சியுள் மீட்சியும்; மீட்சியுள் அன்பழகும், அருளழகும் புதைந்துள்ளன, நயம் பலவுள. விரிக்கிற் பெருகும். அறிஞர் ஆராய்க.

ஒயோன் ஓர் மணமகள். எம்பிரான் ஏசுபகவான் திருமணமகன், மணமகள் மணமகன் மேற் காதல்கொள்ளலும் உலக இயல்பு இஃது நேர்மையே. நீர்மையும் உடைத்து எனின் ஆன்றோர் ஒப்பமுடித்த கருத்தும் பொருத்தமே கவி தன்னைத் தீயோன் என்றல் எதன் பொருட்டு? 'என்னைத்தான் தேடாய்' என்று கெஞ்சிப் பேசுகின்றார். சீயோன் கன்னியை மட்டும் விழைகின்றாய். என்னை மட்டும் வெறுப்பாய், யானும் ஓர் கன்னி அன்றோ ! அக் கன்னியைவிட யான் அழகு ஒழுகும் அழகி இல்லையோ ! யான் மட்டும் உனக்கு வேப்பங்காயோ! சீயோன் மட்டும் உனக்கு கனியொடு கலந்த தேனோ! என கவிஞர் தம்மைத் தாழ்த்தி அவரை இறைவன் வாழ்த்தவேண்டி நின்றனர். அன்னையால் கெஞ்சிக் கூறுவது மழலைச் சொல்வாயர் இயற்கை. அஃதேபோல் அடியார் பலர் ஈசன்பால் உரையாடுவது நேர்மையே. தொண்டர் தம் உளத்து ஒடுக்கம், அன்புத் தந்தை. மைந்தர் தந்தைக்கு ஆற்றும் உதவி என்னை? எந் திருத்தந்தை ஏசுபிரான் மகுடத்தின் கண் ஒளிரும் மாணிக்கக் கற்கள் மைந்தரே, மைந்தர் தமக்குத் துணை அவர் தம் தந்தையே. தந்தை தனக்கு மகுடம் அவன் தன் திருமைந்தரே. தந்தை -மைந்தர் முறையில் எம்பெருமானார் பால் உரையாடுவதும் சிறக்கும், ஸ்ரீ கிறிஸ்து பெருமான் திருவடிகளே வாழ்க. ஓம் கிறிஸ்து நமோ.



கீர்த்தனை கவிஞர் டோனாவூர்

# பா . தாவீது ஐயர்

பேராசிரியர் ஜான்சி பால்ராஜ்

ஆயக்கலைகள் 64. அவற்றுள் இசைக்கலை என்பது மனித பண்பாட்டிற்கே உரியது. மனிதனின் வாழ்வோடு இசை எப்போதும் சங்கமித்து வருகிறது. அதிலும் சமயங்களுக்கும் இசைக்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டு. இசையின் வழியாக இறைவனைப் பாடித்துதி செய்வதும் வேண்டுதல் செய்வதும் உலகளாவிய முறையாகவே இருந்து வருகிறது.

மனிதனுக்கும் கடவுளுக்கும் இடையேயான தொடர்பு இசையின் வழியாகவே பெருமளவில் இருந்து வந்துள்ளதை நமது சமய வரலாறுகள் தெளிவு படுத்துகின்றன.

இந்திய இசைவடிவில் பாடப்படும் பாடல்கள் கீர்த்தனைகள் எனப்படுகின்றன. அதாவது, வட இந்தியாவில் தோன்றிய இந்துஸ்தானிய பாரம்பரிய இசை, தென்னிந்தியாவில் தோன்றிய கர்நாடக இசை ஆகிய இவ்விரு வடிவங்களில் கீர்த்தனைகள் இயற்றப்பட்டுப் பாடப்படுகிறது. பொதுவாக கீர்த்தனைகளில் சுரத்தைவிட சொற்களுக்கே அதிக முக்கியத்திவம் அளிக்கப்படுகிறது. எனவே கீர்த்தனைப் பாடல்கள் கேளாரும் வேட்பதக்கதாக அனைவரையும் ஈர்க்கிறது.

கிறித்தவ சமயமும் இசையோடான இறைவழிபாட்டு முறைகளையே அதிகளவில் கடைபிடிக்கிறது. கிறித்தவ வழிபாட்டில் பெரும்பகுதியை இசையே ஆக்கிரமித்திருக்கும். இதில் ஆரம்பகால இந்திய கிறித்தவ சமய வழிநடத்திகள் தாங்களாகவே பாடல்களை எழுதி, கீர்த்தனைகளாகப் பாடல்களை இசைத்தனர். கீர்த்தனைகள், பல்லவி, அனுபல்லவி, சரணம் ஆகியவற்றை உள்ளடக்கியவாறு அமைக்கப்பட்டிருக்கும்.

தமிழகத்தில் கிறித்தவ கீர்த்தனைப் பாடல்களை 20 ஆம் நூற்றாண்டில் தமிழக கிறித்தவ சமயத்தை வளர்த்த சபை உபதேசிகர்கள், உபாத்தியார்கள், போதகர்கள், குருவானவர்கள், ஆசிரியர்கள், விசுவாசிகள் என்று நிறையபேர் எழுதியுள்ளனர். இவர்களுள் அயல்நாட்டு கிறித்தவச் சமய பணியாளர்களும் அடங்குவர். அப்பாடல்கள் இன்றுவரை கிறித்தவர்களால் ஆலய வழிபாடுகளில் பாடப்படுகிறது.

கீர்த்தனைப் பாடல்களை எழுதியவர்கள் சிறந்த தமிழ்ப் புலமைப் பெற்றவர்களாக இருந்திருப்பதையும் அப்பாடல்கள் மூலம் அறிய முடிகிறது. பாடல்கள் பெரும்பாலும் யாப்பிலக்கண முறை தவறாமல் எழுதப்பட்டுள்ளமை, அவற்றின் சிறப்பு.

தஞ்சை வேதநாயகம் சாஸ்திரியார், திருநெல்வேலி மரியான் உபதேசியார், திருவண்ணாமலை மாசிலாமணி ஐயர், பாளையங்கோட்டை ஹெ.ஆ. கிருட்டிணப்பிள்ளை, தரங்கம்பாடி ஞா. சாமுவேல் ஐயர், நாகர்கோவில் யோ. பால்மர் ஐயர், டோனாவூர் பா. தாவீது ஐயர் உட்பட என்பதற்கும் மேற்பட்டோர் கீர்த்தனைகளை எழுதியுள்ளனர்.




இக்கீர்த்தனைப் பாடலாசிரியர்களுள் அருட்திரு பா.தாவீது ஐயா அவர்கள் குறிப்பிடத்தக்கவராவார். சீர்த்திருத்த கிறித்தவப் பிரிவினர்கள் பயன்படுத்தும் இருநூற்றாண்டு கீர்த்தனைப் புத்தகத்தில் இவரது பாடல்கள் 208, 230, 283, 313 என்ற எண் வரிசைகளில் இடம் பெற்றுள்ளன. கிறித்தவக் கீர்த்தனைப் பாடல் நூலில் 109,300,350,,122 என்ற வரிசை எண்களிலும் இடம்பெற்றுள்ளன.

1. ஏசு கிறிஸ்து நாதர்,எல்லோருக்கும் ரட்சகர்-கி.கீ 109
2. இந்தக் குழந்தையை நீர் ஏற்றுக் கொள்ளும் கர்த்தாவே- கி.கீ 300
3. இம்மணர்க் கும்மருள் ஈயும், பர வாசா! ஏசுக் கிறிஸ்தய்யா,ஓ சருவேசா ! - கி.கீ 350
4. ஐயையா,நான் ஒரு மா பாவி- என்னை ஆண்டு நடத்துவீர்,தேவாவி!- கி.கீ122.

அவர் இயற்றிய இந்நான்கு பாடல்களுமே இன்றுவரை சீர்திருத்தக் கிறித்தவர்களால் அடிக்கடி வழிபாட்டில் பாடப்படுகின்றன.

அவற்றுள்,

"இந்தக் குழந்தையை நீர் ஏற்றுக் கொள்ளும் ஏசுவே" என்ற பாடல் குழந்தைகளுக்கு ஞானஸ்நானம் கொடுக்கும் பொழுது தவறாமல் பாடப்படும் ஒரு முக்கியமான பாடலாகும். **'இம்மணாக் கும்மருள்'** என்று தொடங்கும் பாடல் திருமண விழாக்களில் பாடப்படும் பாடல்.

அருட்திரு பா. தாவீது ஐயர் கி.பி 1841 ல் சிவகாசி அருகே சோலைச்சேரி என்ற ஊரில் பிறந்தவர். இவரது தந்தை திரு. பாக்கியநாதன். இவர் 1876 ஆம் ஆண்டு பாளையங்கோட்டையில் குருவானவராக (Reverent) திருமுழுக்குப் பெற்று 1876 மற்றும் 1877 ஆகிய இரு ஆண்டுகளும் சிவகாசி சேகர குருவாக பணியாற்றினார். இவருடன் 1877 முதல் 1895 வரை 18 ஆண்டுகள் டோனாவூரில் சேகர குருவானவராக பணியாற்றியுள்ளார். இதில் 1892 முதல் 1895 வரை டோனாவூர் வட்டத்தின் தலைமை குருவாக ( Chairman, Dohnavur Circle) ,பணியாற்றியிருக்கிறார். அவர் பணியில் இருக்கும் போதே 1895 ல ஜூன் 25 ஆம் தேதி இவ்வுலக வாழ்வை விட்டு பிரிந்தார் (தகவல்,The Right Rev.F.J.Western,Bishop of Tinnevelly- Register of Tinnevelly Glergy 1776 to 1936. S.No 172. p.48)

அவரது உடல் டோனாவூர் கிறிஸ்து ஆலய வளாகத்திற்குள் அடக்கம் செய்யப்பட்டது. அதில் அவரது கல்லறையும் இருந்தது. பின்னர் 2014 ஆம் ஆண்டு அவ்வாலயம் விரித்துக் கட்டப்பட்ட போது அவரது கல்லறை ஆலயத்தின் உட்புறம் அமைக்கப்பட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. எனவே இப்போது அவரது கல்லறை இருந்த இடம் டோனாவூர் ஆலயத்திற்குள் உள்ளது என்பதும் குறிப்பிடத்தக்கது. இவர் சில புத்தகங்களையும் எழுதியிருப்பதாக தெரிகிறது (மேலது ப 48). ஆனால் என்னென்ன நூல்களை எழுதியிருக்கிறார் என்பதை அறிய இயலவில்லை. அவற்றைத் தேடி நமது நூலகத்தில் சேர்க்கவோ புதிதாகப் பதிப்பிக்கவோ வேண்டியது நமது கடமையாகும்.

கிறித்தவச் சமயப் பாடல்கள் இக்காலக் கட்டத்தில் ஏராளமாக வந்தபோதிலும், கீர்த்தனைப்பாடல்களின் இடத்தை அவற்றால் எட்ட இயலவில்லை என்றே கீர்த்தனைப்பாடல் இரசிகர்கள் இன்றும் கூறுகின்றனர்.

## கீர்த்தனை கவிஞர் அருள்திரு. சற்குணம் உயின்பிரட்

ஜெபராஜ் I J

1810-ஆம் ஆண்டு நாசரேத்துக்கு அருகிலுள்ள வாழையடி ஊரில் சற்குணம் உயின்பிரட் பிறந்தார் கல்வியில் சிறந்து விளங்கிய இவர் சென்னையில் 1827-1830 வரையும், இலங்கையில் 1830-1832 வரையும் இறையியல் பள்ளியில் பயின்றார். பின்னர், பாளையங்கோட்டை இறையியல் கல்லூரியிலும் 1845-1847 வரை திருமங்கலத்திலுள்ள இறையியல் பள்ளியிலும் ஆசிரியராய் இருந்தார். மிகுந்த ஊழிய ஆர்வமும், இடைவிடாத உழைப்பும் இறையியலை விளக்கும் தன்மையும் இவரிடம் சிறப்பாகக் காணப்பட்டன. ஆகவே பாளையங்கோட்டை இறையியல் கல்லூரியின் முதல்வராக்கப்பட்டார். மேலும், **'இறையியல் கல்லூரியின் முதல் இந்திய முதல்வர்'** என்னும் சிறப்பையும் பெற்றார்.

சற்குணம் 1855- மார்ச் 20 அன்று போதகராக அருட்பொழிவு செய்யப்பட்டார். தொடர்ந்து மல்லாங்கிணறு ஊரில் போதகராகப் பணியாற்றினார். இவர் தாவீதரசன் அம்மானை, உதிரமகத்துவம், இரத்தினாவதி நாடகக் கதை, சான்றோர் குலமரபு காத்தல் போன்ற நூற்களை இயற்றியுள்ளார். Holy War என்ற ஜான் பனியனின் ஆங்கில நூலைத் தமிழில் திருப்போர் என மொழிப்பெயர்த்தார்.

> **'தீய மனதை மாற்ற வாரும், தூய ஆவியே - கன**
> **நேய மேவியே (205)**

என்ற பாடல் பாமாலையில் இடம்பெற்றுள்ளது. இப்பாடல் மனிதரிடையே காணப்படுகின்ற தீயக் குணங்களைக் காட்டி நிற்கின்றது. மனித மனமானது எப்போதும் தீயனவற்றை நினைத்து, தீமையைச் செய்ய விரும்பும். தீமைச் செய்யும் மனம் என்னிலே இருப்பதனால் பரத்தையும் நோக்கிப் பார்க்க நான் மனமின்றி அலைகின்றேன். ஆகவே பாவியான என்னை மன்னித்து ஏற்றுக்கொள்ளும் என்கிறார்.

> **'புதிய சிந்தை, புதிய ஆசை புதுப்பித்தாக்கவே அதைப்**
> **புகழ்ந்து காக்கவே' (205:3)**

இதில், மனம் புதிய சிந்தைகளையும், எண்ணங்களையும் கொள்ளும்போது தீமைச் செய்யும் எண்ணம் மறையும். ஆகவே அதனைத்தாரும் என மன்றாடுகிறார். கிறித்துமீதும், திருமறையின் மீதும், ஜெபம் பண்ணுவதிலும், அதிக ஆர்வம் ஏற்பட வேண்டும் எனவும் அவர் இறைவனிடம் கேட்கின்றார். இத்தகைய சிறந்த எழுத்தாளரும், கவிஞருமான சற்குணம் அவர்கள் 1879-ஆம் ஆண்டு 69-ஆம் வயதில் மரணமடைந்தார்.

# கவிராயர் ரூபன் பாகவதர்

1903 -1970

அருட்திரு. பேரா. எம் தேவராஜ், நீலகிரி



நீலகிரி மாவட்டத்தில் எண்ணிறைந்த கவிஞர்கள், கலைஞர்கள் வாழ்ந்துள்ளனர், இன்றும் வாழ்ந்து வருகின்றனர். இவர்களுள் கவிராயர் பாகவதர் எஸ். ஐ. ஜே. ரூபன் என்ற அருட்கவிஞரும் ஒருவர்.

நீலகிரி மாவட்டம் உதகமண்டலத்தில், நினைவில் வாழும் வி.எம் ஜான் அவர்களின் மகன் திரு.சாமுவேல் அவர்களுக்கும், திருமதி ஞானம்மாள் இணையினருக்கு பன்னிருப் பிள்ளைகளுள் முதல் பிள்ளையாக ரூபன் அவர்கள் 1903 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 24ஆம் தேதி சனிக்கிழமை, பிறந்தார். பெற்றோர் இவருக்கு இம்மானுவேல் ஜேக்கப் சாமுவேல் எனப் பெயர் சூட்டி, திருமுழுக்காட்டி மகிழ்ந்தனர், குழந்தையாக இவரது அழகில் வியந்த உற்றார் உறவினர்கள் செல்லமாக இவரை ரூபா! ரூபன்! என அழைக்கலாயினார், திருவிவிலியத்தில் யாக்கோபு என்ற இஸ்ரயேலின் பன்னிரு புதல்வர்களில் ரூபன் மூத்தவரானப்படியால், **'ரூபன்'** என்றப் பெயர் இவருக்குச் சாலப் பொருத்தமாய் அமைந்தது, எனவே இவர் பெயர் எஸ். ஐ. ஜே. ரூபன் என அழைக்கப்பட்டது.

இவர் தன் தொடக்க கல்வியையும் உயர் நிலை படிப்பையும் உதகமண்டலத்தில் உள்ள காந்தள் என்ற இடத்தில் இருந்த சி.எம்.எஸ் பள்ளியில் இனிதெனக் கற்று, பின்னர் கல்கத்தாவில் உள்ள ஒரு கல்லூரியில் சிறப்பு ஆசிரியர் பயிற்சியை சிறப்புடன் முடித்து, உதகமண்டலத்தில் உள்ள செஞ்சிலுவை சங்க மழலையர் மாதிரிப் பள்ளி ஆசிரியராகவும் பின், பணி உயர்வுப் பெற்று அப்பள்ளியின் தலைமை ஆசிரியராகவும் பல்லாண்டுகள் பணியாறி 1967 ஆம் ஆண்டு பணி மூப்பு ஓய்வுப் பெற்றார். சிறு குழந்தைகளுக்கு ஆற்றும் பணி இறைவனுக்கு ஆற்றும் திருப்பணியென உளமாற குழந்தைகள் மத்தியில் குழந்தையாக குழந்தையுள்ளத்தோடு பணியாற்றினார்.

ரூபன் அவர்கள் 1930 ஆம் ஆண்டு மார்ச் மாதம் மூன்றாம் நாள் (03-03-1930) திங்கள் கிழமை தமது 27 வது வயதில் செல்வி பியட்ரீஸ் கண்ணம்மா (Beatrice Kannamma) அவர்களை தம் வாழ்க்கைத் துணையாகக் கைப்பிடித்தார். பியட்ரீஸ் கண்ணம்மா அவர்கள் ஒரு சிறந்த பியானோ (Piano) இசைப்பாளர், ரூபன் அவர்கள் இயற்றும் பாடல்களுக்கு இசையமைக்க அவரது வயலின் (Violin) இசையும், அவரது துணைவியாரின் பியானோ இசையும் சேர்த்து செழுமைச் சேர்த்திருக்கும் என எண்ண தோன்றுகின்றது.

ரூபன் பியட்ரீஸ் கண்ணம்மா இணையினருக்கு கடவுள் நான்கு குழந்தைகளை அருளினார். இவ்விணையினரின் பதினெட்டு ஆண்டு இன்பமான திருமண வாழ்வில் இறுதியில் திருமதி பியட்ரீஸ் கண்ணம்மா அவர்களுக்கு 1948ஆம் ஆண்டு விஷக்காச்சல் ஏற்பட்டு மரணத் தருவாயிலிருக்கும் போது, ரூபன் அவர்களிடம், **'நீங்கள் எனக்கு ஒரு வாக்கு தரவேண்டும், நான் உயிர் பிழைத்து வாழ்வேனா எனத் தெரியாது, நான் இறந்தப் பின்னர் நீங்கள் மறுமணம் செய்தி என் பிள்ளைகளை ஆதரவற்றவர்களாக்க வேண்டாம்'** எனக் கேட்டு நித்திய இளைப்பாறுதலுக்குச் சென்றார். அதன் பின்னர் ரூபன் அவர்களின் தாயார் இவரை மறுமணம் செய்துக் கொள்ள ஆலோசனைச் செல்லி வற்புறுத்தவே, தன் தாயாரின் வற்புறுத்தலுக்கு என்ன பதில் சொல்ல வேண்டும் எனப் புரியாமல் ஒரு நாள் வீட்டிலிருந்துச் சென்றவர் காவியுடையும், கழுத்தில் சிலுவையும் அணிந்து வீடுத் திரும்பினார், இந்த தியாக வாழ்விலிருந்து அவர் இறுதிவரை பின் மாறவில்லை, இறைப்பணியும், இசைப்பணியும், இலக்கியப்பணியும் செய்ய தம்மை முழுதும் அர்பணித்து தம் குழந்தைகளை இறைபற்றில் வளர்க்கலானார்.

ரூபன் அவர்களுக்கு இயற்கையிலேயே கவி ஞானமும், கலை ஞானமும் ஒன்றரக் கலந்திருந்தது. அவர் தமிழ் மற்றும் ஆங்கிலத்தில் சரளமாக பேசுவும், எழுதுவும் சிறப்பு புலமைப் பெற்றிருந்தார். இவர் தமிழில் பல கவிதைகளையும், கிறிஸ்தவ பக்திப் பாடல்களையும் (கீர்த்தனைகளை) இயற்றியுள்ளார். இவர் எழுதிய பாடல்களுக்கு இவரே இசையமைப்பார் இவரது கிறிஸ்து பிறப்பு பஜனைப் பாடல்கள் இன்றளவும் உதகமண்டல கிறிஸ்தவ பாடல் குழுவினரால் கிறிஸ்மஸ் காலங்களில் கிறிஸ்துமஸ் பவனிகளில் பாடி மகிழுகின்றனர்.

கர்நாடக இசையில் புலமைப் பெற்றிருந்தார், வயலின் வாசிப்பதில் இவருக்கு நிகர் இவரே. இவர் இசையை யாரிடம் கற்றார் எனத் தெரியவில்லை, ஆனால் மிகச் சிறந்த இசையமைப்பாளராக இருந்துள்ளார். இவர் குரல் வெண்கலம் போல் கணீரெனவிருக்கும், இவரது கணீரென்ற குரல் வளம் கடவுள் வழங்கிய மிகப் பெரிய

வரமாகும். ரூபன் அவர்கள் தாமே இயற்றி இசையமைத்து தமது சொந்தக் குரலில் கணீர் கணீரெனப் பாடியதால் இவருக்கு **'பாகவதர்'** என்றப் பட்டம் வழங்கி சிறப்பிக்கப்பட்டார், எனவே இவரை மக்கள் **'ரூபன் பாகவதர்'** என அழைத்தனர். ஒருமுறை தஞ்சை வேதநாயகம் சாஸ்திரியார் அவர்கள் உதகமண்டலம் வந்திருந்தப் போது இவருக்கு **'பாகவதர்'** என்ற சிறப்பு பட்டத்தை வழங்கியதாக ஒரு தகவல் உண்டு.

ரூபன் பாகவதர் அவர்கள் கைதேர்ந்த கலைஞர். இவர் உதகமண்டலத்தில் மட்டுமின்றி, தமிழகத்தின் பலப் பகுதிகளில் குறிப்பாக **'லெந்துக் நாட்களில்'** தமிழ் கிறிஸ்தவ திருச்சபைகளில் கதை கதாகலாட்சேபம் நிகழ்த்துவார்.

ரூபன் பாகவதர் அவர்கள் நல்ல நகைச்சுவையுணர்வுக் கொண்டவர் என இவரது பாடல்கள் மற்றும் இவர் எழுதிய சில நாடகங்கள் இவரது நகைச்சுவையுணர்வை வெளிப்படுத்துகின்றது. இவர் எழுதி இயக்கிய நாடகங்கள் இந்நூலசிரியருக்குக் கிடைக்கவில்லை ஆனால் கிடைக்கப் பெற்ற சில நாடகங்களின் தலைப்புகள் அவர் எவ்வளவு நகைச் சுவையாளர் என நமக்குத் தெரிவிக்கிறது.

கவிராயர் ரூபன் பாகவதர் அவர்களின் கவித்திறமையைப் பாராட்டி மதுரை தமிழ் சங்கம் 1952 ஆம் ஆண்டு **'கவிராயர்'** (கவியரசு) என்ற மிக உயரிய விருதை வழங்கி கௌரவித்துள்ளது. உதகமணடலத்தில் உள்ள அனைத்து கிறிஸ்தவ திருச்சபைகளை ஒன்றிணைத்து ஒரு சிறந்த பாடல் குழுவை அமைத்து, கிறிஸ்மஸ் பஜனைக்கு ஒவ்வொரு ஆண்டும் புதியப் புதியப் பாடல்களை இயற்றி, இசையமைத்து பாடற்குழுவுக்கு பயிற்சியளித்து பாடல்களை அரங்கேற்றுவார். இவர் உதகமண்டலம் இளம் கிறிஸ்தவ வாலிபர் சங்கத்தில் தீவிர அங்கத்தினராய் இருந்தார். இவருக்கு வழங்கப்பட்ட இரண்டு விருதுகளால் இவரை மக்கள் கவிராயர் ரூபன் பாகவதர் என அன்போடு அழைப்பார்கள்.

கவிராயர் ரூபன் பாகவதர் அவர்கள் தேவாலயப் பணிகளில் மிகுந்த ஈடுப்பாடுக் கொண்டிருந்தார். தூய திரித்துவ தேவாலயத்தின் கீழ் இயங்கும் காந்தள் தூய யோவான் தேவாலயத்தின் வளர்ச்சியில் பங்கேற்றார் மேலும் இவ்வாலயத்தில் மணிக்கூண்டை புதுப்பிக்க மிகவும் பாடுப்பட்டார்.

கவிராயர் ரூபன் பாகவதர் அவர்களின் தேர்வுச் செய்யப்பட்ட சில முத்தானப் பாடல்களையும் அவரது சில நாடகங்களையும் 1953 ம் ஆண்டு கிராம் போன் இசைத் தட்டில் **'ஹிஸ் மாஸ்டர்ஸ் வாயீஸ்'** (HIS Master's voice) பதித்துச் சாதனைச் செய்துள்ளார். கீழே சில தகவல்கள் உள்ளது உங்கள் பார்வைக்கு ஒரு பட்டியலிடப்பட்டுள்ளது. நாம் அறிந்ததுப் போல் நீலகிரியில் இவரது பாடல்கள் மட்டுமே அந் நாட்களில் முதல் முதலாக எல்பி இசைத் தட்டில் பதிவுச் செய்யப்பட்டுள்ளது என்பது சிறப்பிற்குறியதாகும்.

இவரது இசைத்தட்டு விளம்பரம் ஒன்று இந்நூலசிரியருக்குக் கிடைத்து, அதில் கவிராயர் ரூபன் பாகவதர் அவர்கள் சுமார் 30 இசைத் தட்டுகளை வெளியிட்டதாக அறிகிறோம். **'தி டிவினில்'** ("THE TWIN") கேளுங்கள் என விளம்பரம் செய்யப்பட்டுள்ளது. மேலும் இவரது இரண்டாவது மகள் வாசுகி வைலட் அவர்களுடன் இணைந்து பத்துக்கு மேற்பட்ட இசைத்தட்டுகளை வெளியிட்டுள்ளார் எனத் தெரிகின்றது.

கிறிஸ்துவின் பிறப்பு இசைத்தட்டுகளில் தொகுதிகளாக, மகதலேன மரியா இசைத்தட்டுகளில் தொகுதிகளாக, பவுலுடைய மனமாற்றம் இசைத்தட்டுகளில் தொகுதிகளாக, நல்ல சமாரியன் இசைத்தட்டுகளில் தொகுதிகளில், மேற்சொன்ன இந்த இசைத் தட்டுகள் கதாகலாட்சேபங்களான இருக்கலாம் என இந்நூலாசிரியர் கருதுகிறார்.

### கிறிஸ்தவ கீர்த்தனைகள்

**'அதிரவை', 'சந்தை என்னும்'** என்ற இருப் பாடல்கள் ஒரே இசைத் தட்டில் பதிவுச் செய்யப்பட்டுள்ளது. கவிராயர் ரூபன் பாகவதர் மற்றும் ராஜப்பா ஆகியோர் இணைந்து பாடிய **'பேதுரு மற்றும் யூதாஸ்'** எனறப் பாடல் ஒரே இசைத் தட்டில் இருதொகுதிகளாக பதிவுச் செய்யப்பட்டுள்ளது. இந் நாட்களில் இருப்பதுப் போல் அந்நாட்களில் பொழுதுப் போக்கு அம்சங்கள் மிகவும் குறைவாக இருந்தமையால் அதற்கு ஈடுக்கட்ட கவிராயர் ரூபன் பாகவதர் அவர்கள் குடும்பங்களின் பொழுதுப் போக்குக்கெனவே சிறப்பு இசை தட்டு ஒன்றினை உடைந்த ஆங்கிலத்தில் (Brocken English) பதிவுச் செய்துள்ளார், இந்த இசைத் தட்டில் கவிராயர் ரூபன் பாகவதர் அவர்களும் டிரவர்ஸ் டிராப்ஸ் (Travers Drapes) அவர்களும் இணைந்து குரல் கொடுத்துள்ளனர்.

சாய்பும் சமையல்காரரும் சமையல்கார்தி (Saheb and Cook); கிறிஸ்மஸ் காலை (Christmas morning) என்ற இசைத்தட்டையும் வெளியிட்டார். **'மாட்டு வண்டிக்காரன்'** என்ற நாடகம் அல்லது கேலிக்கூத்து நாடகம் இரண்டு தொகுதிகள் கொண்ட ஒரு இசைத் தட்டை வெளியிட்டார். **'வளையும் (பொந்து) கடைக்காரனும்'** இரண்டு தொகுதிகளடங்கிய ஒரு இசைத்தட்டு.

**'சோரு க் பானையும் மாலைக் கண்ணும்'** என்ற சிரிப்பு (பாடல் அல்லது நாடகம்) ஒரு இசைத்தட்டு. மேற்கண்ட இசைத்தட்டுகள் யாவும் அந்நாட்களில் குன்னூர் வி.பி தெருவில் இருந்த திரு. டி. எம். நடேசப்பிள்ளை அவர்களின் கடையில் விற்பனைக்கு இருந்தது என விளம்பரம் வாயிலாக அறிகிறோம்.

கவிராயர் ரூபன் பாகவதரின் படைப்புகளில் பல கால வெள்ளத்தில் பாதுகாக்கப்படாமல் போய்விட்டது. இது தமிழ் (கிறிஸ்தவ) இலக்கிய உலகத்திற்கு பெரிய நட்டம் எனில் அது மிகையாகாது. இந்நூல் ஆசிரியரின் ஆய்வில் சுமார் 15 பாடல்களைத் தேடி பதிப்பித்துள்ளார்.

கவிராயர் ரூபன் பாகவதர் அவர்கள் சிறந்த தமிழ் கவிஞர், கதா கலாட்சேப கலைஞர், என்று மட்டும் நில்லாது இவர் ஓர் சிறந்த நாடக ஆசிரியரும் கூட, இவர் எழுதி இயக்கிய நாடகங்கள் எத்தனை எனத் தெரியாவில்லை, அவைகளில் ஒன்றுக்கூட இந்நூலாசிரியருக்குக் இதுவரைக் கிடைக்கவில்லை, இவர் இயற்றி இயக்கிய நாடகங்களுள் குறிப்பிட்டுச் சொல்லும் நாடகங்கள் **'தகாவா', 'நல்ல சமாரியன்', 'பவுலின் மன (மத) மாற்றம்', 'கிறிஸ்துப் பிறப்பு'** போன்றவையாகும். இவரே நாடகங்களில் பாத்திரம் எடுத்து நடித்துள்ளார்.

கவிராயர் ரூபன் பாகவதர் அவர்கள் பன்முகம் கொண்ட ஒரு படைப்பாளராவார், இவர் ஒரு சிறந்த எழுத்தாளரும் வரலாற்றாளருமாவார். இவர் தவறாமல் கோவை மறைமாவட்ட (திருமண்டல) **'கோயமுத்தூர் அத்தியாட்சாதீன தீபிகை'** என்ற மாத இதழில் கட்டுரைகளை ஒவ்வொரு மாதமும் எழுதியுள்ளார். உதகமணடல திருமுழுக்கர் (பாப்திஸ்த்து) தேவாலயத்தின் முதல் போதகரான அருட்திரு. தேசிகர் இ.சி.மா. லாசர் அவர்களின் வாழ்க்கை வரலாறு நூலை தொகுத்துள்ளார் இந்நூல்

முத்தாய்ப்பான ஒன்று என்றால் அது மிகையல்ல. இவர் ஓர் சிறந்த ஓவியராகவும் விளங்கினார் இவரது கற்பனையில் உருவான 110 ஓவியங்கள் பாதுக்காக்கப்பட்டுள்ளது. இவரது தூரிகையில் தமிழர் பண்பாடு, நீலகிரியின் தொல்குடி மக்களின் வாழ்வு முறை, கிறிஸ்தவ திருவிழாக்கள் போன்றவை ஓவியமாக வரைந்துள்ளார்.

கவிராயர் ரூபன் பாகவதர் அவர்கள் உதகமண்டலம் இளம் கிறிஸ்தவ சங்கம் (YMCA) மற்றும் தூய திரித்துவ தேவாலய வாலிபர் ஐக்கிய சங்கம் போன்றவற்றில் முழு ஈடுப்பாட்டுடன் பங்குக் கொண்டார். உதகமண்டல தூய திரித்துவ தேவாலய பாடல் குழுவை முதல் முதலாக ஏற்படுத்தி திருச்சபையார் பாடல்களை சிறப்புடன் பாட காரணமாயிருந்தவர் என்றால் அது எவ்வகையிலும் மிகையாகிடாது. அந்நாட்களில் உதகமண்டலத்தில் செயல்பட்டுவந்த **'உதகமண்டலம் வித்வாபிமான சங்கத்தின்'** உறுப்பினராக இருந்துள்ளார். உதகமண்டலத்தின் அனைத்து கிறிஸ்தவ திருச்சபைகளின் ஒன்றிணைப்புக்கு முக்கிய பங்காளராகவும் முன்னோடியாகவும் இருந்துள்ளார் என்பது சிறப்புடன் கவனிக்க வேண்டும். இவரும் இவரது நண்பர்களுமாக உதகமண்டலத்தில் **'மேசிய பஜனை சங்கம்'** ஒன்றினை நடத்தியுள்ளார்.

கவிராயர் ரூபன் பாகவதர் அவர்கள் சிறந்த இறைப்பற்றாளர் இறைப்பணியாளர், இலக்கியவாணர், கடின உழைப்பாளர், நேரம் தவறாதவர் என பல சிறப்புகளுக்குறியவராவார். அன்னார் 1970 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 10வது நாள் தமது 67வது வயதில் தம்மை நேசித்து மீட்டுக்கொண்ட கிறிஸ்துவின் திருமுன் இளைப்பாருதலடைய இவ்வுலகில் விசுவாச ஓட்டத்தை ஓடி முடித்து ஜீவகிரீடத்தைப் பெற உயர்தெழுதலின் நம்பிக்கைகாக காத்துக் கொண்டிருக்கிறார்.

## கீர்த்தனை கவிஞர்

# ஜோசப் ஜோயல்சிங்

கன்னியாகுமரி மாவட்டம் நெய்யூர் என்ற ஊரில் பிறந்தார். இவரது தந்தை பவுல் உபதேசியார். ஜோசப் அவர்கள் வயலின் வாசிப்பதில் திறமையானவர். கர்நாடக சங்கீதமும் நன்கு தெரிந்தவர். திருவனந்தபுரம் கண்ணம் மூலையிலுள்ள இறையியல் கல்லூரியின் பாடலாசிரியராகயிருந்தார்.

ஜோசப், தன்னிடம் காணப்பட்ட மிகுந்த புலமையினால் 'கவிராயா' என்றப் பட்டம் பெற்றார். இவரது 9 கீர்த்தனைகள், கிறிஸ்தவப் பாமாலையில் இடம் பெற்றுள்ளன. கிறித்துவின் பாடு மரணங்களைக் குறித்தப் பாடல்கள் இவர் இயற்றியுள்ளார்.

**'அன்பு நிறைந்தவரே - எங்கள் ஆசைக் கிறிஸ்தரவே**

**துன்பம் மிகவடைந்தே - சிலுவையில் - தூங்கி மரித்தீரோ' (136:1)**

**'வந்தேன் கல்வாரி சிலுவையினருகே - எனைத்**

**தந்தேன் எனக்காய்ப் பிணை நின்றவனே' (146 : பல்லவி)**

**'முற்றும் பரன் செயலை முடிக்கக் குருசில் தூங்கி**

**முடிந்த தென்றாவி விட்டீர் ஐயோ, ஐயோ, ஐயோ' (172:2)**

**எவ்வித சூழ்நிலையிலும் அவரை உறுதியாகப் பற்றிக் கொள்வதை**

ஜோசப் அவர்கள் விடவில்லை.

**'பின் செல்வேன் என் மீட்பரே - நானும்மைப்**
**பின் செல்வேன், என் மீட்பரே' (281 : பல்லவி)**

என்னும் கீர்த்தனை இதனை உணர்த்தி நிற்கின்றது. கீர்த்தனைக் கவிஞரான ஜோசப், தமது மூன்று புதல்வர்களுடன் சேர்ந்து கதாகாலட்ஷேபம் நடத்தி, அதன் மூலம் நற்செய்தியைப் பரப்பி வந்தனர்.

**மன்னா செல்வகுமார்**

# கிறிஸ்தவ வழிப்பாட்டில் இசை

R.Sukirtharaj.BA,MA(MUSIC),TRICHY

50 ஆண்டுகளில் கிறிஸ்தவ திருச்சபையில் இசை வளர்ச்சி திருச்சபையின் தொடக்கக் காலத்தில் வழிபாட்டுக்கு எனப் பாடநூல் இல்லை, பசுமலையில் மேலைநாட்டு அருள்தொண்டர்கள் அருட்திரு.வெஸ்பார்ன் மில்லர் சாம்புரோ முதலியோர், சிறுபாடல் நூல் வெளியிட்டனர். இது வழிபாட்டுப் பாடநூல் இதனை கிறிஸ்தவ இலக்கிய சங்கத்திற்கு தந்து மேலும் நன்கு விரிவாக்கி அமைக்க வேண்டினார்கள்.

கிறிஸ்தவ இலக்கிய சங்கம் (CLS) பெரிதும் ஆர்வம் கொண்டு ஆழமாக ஆய்ந்து தொழுகைப் பாடல்நூல் அமைத்துத் திருச்சபைகளுக்கு அளித்தது. அதன் பாடல்கள் கீர்த்தனை அமைக்கும் துறையில் தேர்ந்தவர்களால் அமைக்கப்பட்டிருந்தன. எபிரேய மொழி தமிழ்மொழிப் போல் தொன்மையான மொழி.

அதில் இலக்கிய நயமிக்க தொழுகைப் பாடல்களின் தொகுப்பு உண்டு. இறைப் போற்றிப் பாடல்கள் வழிபாட்டிற்கு அழைப்பு கோயில் திருச்சுற்றுகளிலும் இறைவன் திருமுன்பு (சந்நிதி) நின்று பாடும் பாடல்கள் பாவக் கழிவிறக்கப் பாடல்கள், மனம் மாற்றிப் பிறப்பு பற்றிய பாடல்கள் நம்பகம் (HOPE) பற்றுறுதி (FAITH) சமூக சீர்திருத்தம் பற்றிய பாடல்கள் முதலியன உண்டு. இவை மிகு தொன்மையானவை தொழுகைப் பற்றிய தொகுப்பானவை. தாளத்திற்கும் பண்ணிற்கும் (இராகங்களில்) என அமைக்கப்பட்டவை. தமிழகத்துப் பத்துப்பாட்டு, எட்டு தொகை போன்று தொடுக்கப்பட்டவை. கோவில் வழிபாட்டுக்கு எனத் தொகுக்கப்பட்டு சீரிய செவ்வியல் பாடல்கள் என ஏற்று போற்றப்பட்ட பாடல்கள் தான், தென்னிந்திய திருச்சபை பாடல்கள் கத்தோலிக்க திருச்சபைகள் ஆதியில் காணாத பாடல் தொகுப்புத் தொகை நூலை மலர செய்த மாபெருமை எண்ணூர் பசுமலை இறைஊழியர்களுக்கே உரியது. திருச்சபை பாடநூல் என்பது கீர்த்தனை மூலம் கூடி தொழுதிடும் தொழுகை முறை. இதில் தமிழகக் கீர்த்தனைகளைப் பின்பற்றி ஆனந்த பாடல்கள் பல தேவாரத்தை பின்பற்றி அமைந்த பாடல்கள் உள்ளன.

**கீர்த்தனை பாடல் :115**

**பாவம் போக்கும் ஜீவநதியைப் பாரீர்,**
**வந்து பாரீர் - பாரில்!**
**தீவினை தீர்க்கும் தேவமறியின்**
**திருரத்த மிந்த ஆறாம் - பாரில்! - பாவம்**

**கீர்த்தனை பாடல் :106**

**ஒரு மருந்தரும் குருமருந்து**
**உம்பரத்தில் கண்டேனே**
**அருள் மருந்துடன்**
**ஆனந்த மருந்து,**
**ஆதியிற்றானாய்**
**முளைத்த மருந்து,**
**வரும் வினைகளை**
**மாற்றும் மருந்து**
**வறுமையுள்ளோர்க்கே வாய்த்த மருந்து – ஒரு**

**கீர்த்தனை பாடல் :172**

**பாதம் ஒன்றே வேண்டும்; - இந்தப்**
**பாரில் எனக்கு மற்றேதும் வேண்டாம் — உன்**

**கீர்த்தனை பாடல் :161**

**நின்பாதம் துணை அல்லால்,**
**வேறொரு துணை இல்லை, -**
**நித்ய பரம போதா.**
**என் பாவம் போக்கியே**
**கிருபை புரியும், சுவாமி,**
**ஏக வஸ்துவான ஏசுக்**
**கிறிஸ்துநாதா! – நின்**

முதலிய கீர்த்தனைகள் ஈடு இணையில்லா கீர்த்தனைகள், இராக அமைப்பிலும் தாள அமைப்பிலும் சிறந்தவை ஆனந்த பைரவி ராகத்தில் அமைந்த பாடல் ஆனந்தமாய் செட்டை விரித்து என்னும் அழகிய கவிதை கீர்த்தனை இவைகள் கடவுளுக்கு அளித்த தங்கவைரக் காசுகளாம் காணிக்கைகள்.

தமிழ் நாட்டின் தனிப்பெரும் நாவலாசிரியர்

அ மாதவையா அவர்களின்

# கிளாரிந்தா

தமிழ்நாட்டில் வெளி வந்த முதல் வரலாற்று நாவல்

தொடர் –12

சோதிட சாஸ்திரத்தில் தனக்கு நம்பிக்கையே இல்லையென்று சொல்லி, அந்தச் சாஸ்திரத்துக்கு விரோதமாகக் கணைதொடுப்பாள். எத்தனையோ தேர்ந்த சோதிடர்களின் உதவியோடு நிச்சயிக்கப்பட்டும் இருபது வயதுக்குள் அவள் விதவையாக நேரிட்டுவிட்டதே என்று கண் கலங்குவாள். கிளாவிருந்தாவின் இனிய இயல்பு, கல்வி, இணையற்ற அழகு இவற்றையெல்லாம் அந்த இளைஞனிடம் வர்ணித்து, அவன் காதல் தீயைக் கொழுந்து விட்டெரியச் செய்வாள். மாதவராவ் என்ன செய்வதென்று அறியாமல் நின்றான். நஞ்சு இனித்தது. அதை அப்படியே ஆவலுடன் பருகினான். சிலவேளைகளில் அவ்விடத்தைவிட்டுத் தப்பி ஓடினான்.

ஆனால் கமலாபாயின் சாமர்த்தியத்துக்கும் தந்திரத்துக்கும் அவனால் ஈடுகொடுக்க முடியவில்லை. அவன் பெருந்தன்மையாக எடுத்துக்கொண்டிருந்த தீர்மானங்கள் எல்லாம் கமலாபாயின் தந்திரத்தினால் தவிடு பொடியாயின. முதலில் இம் மாதிரி சுவையான பேச்சு வரும்போது அவன் கனவு காண்பவன் போல் மௌனமாகக் கேட்டுக்கொண்டே இருந்தான். ஆனால் வர வர அவன் கண்கள் கிளாவிருந்தாவின் மீது ஆசையுடன் பதிந்தன. பதிந்த கண்களை எடுக்க இயலாமல் அப்படியே நிற்பான். அந்த விழுங்கும் கண்களை கிளாவிருந்தா ஓரிருமுறை சந்தித்தாள். அவள் மனதில் இன்னதென்றில்லாத அமைதியின்மையும் பயமும் தோன்றின. இயல்பான அடக்கமும் அறிவும் கொண்டவளாதலால் எதுவும் பேசவில்லை. ஆனால் அவன் பார்வையைத் தவிர்க்கத் தொடங்கினாள்.

ஒருநாள் பிற்பகல் கமலாபாய் கூடத்தில் ஊஞ்சலில் உட்கார்ந்திருந்தவண்ணம் மாதவராவோடு பேசிக்கொண்டிருந்தாள். 'நந்திக்கு, அந்த ஆரஞ்சு ஷர்பத் ஒரு கிண்ணம் கொண்டுவந்து கொடேன்.' அவன் வருவதைப் பார்த்துவிட்டு முன்கட்டுக்குச் சென்று விட்ட கிளாவிருந்தாவிடம் தான் கமலாபாய் அப்படி உரத்துச் சொன்னாள். முன்கூடத்தில் அமர்ந்து ஒரு சமஸ்கிருத நூலை வாசிக்கத் தொடங்கியிருந்தாள் கிளாவிருந்தா. சில நிமிடங்கள் கழித்து ஆரஞ்சு ஷர்பத் ஒரு வேலையாள் மூலம் வந்தது. கமலாபாய் மீண்டும் உரத்து 'கிளாவிருந்தா, நீ அங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்? நேற்று அரண்மனையில் நடந்த யானைச் சண்டையைப்பற்றி நந்தி சொல்லப்போகிறான். உனக்குக் கேட்கவேண்டாமா?' என்றாள். கிளாவிருந்தா உட்கார்ந்தபடியே, 'நான் படித்துக்கொண்டிருக்கிறேன். அப்புறம் உங்களிடமிருந்து கேட்டுக்கொள்கிறேன்' என்று சொல்லிவிட்டு வாசித்துக்கொண்டே இருந்தாள்.

அன்று இரவு அவள், கமலாபாயிடம் வெளிப்படையாக மாதவராவ் தன்னைப் பார்க்கும் விதம் சரியாக இல்லை என்றும், அது தனக்குப் பிடிக்கவில்லை என்றும் கூறினாள். கமலாபாயோ, மகனாயிற்றே. வீணான சந்தேகம், போலி நாணத்துக்கு எல்லாம் எதற்காக இடம் கொடுக்கிறாய்?' என்று சொன்னதுமல்லாமல், 'எல்லாப் பெண்களுமாடி உன்னைப் போல் அழகாக இருக்கிறார்கள். உன் அழகான முகத்தில் வைத்த கண்ணை வாங்கமுடியாமல் பாவம் அந்தப் பிள்ள தவிக்கிறான். அது நீ பெருமைப்படவேண்டிய விஷயமல்லவா?' என்றும் கூறினாள். 'எனக்கு அப்படித் தோன்றவில்லை. உங்கள் மைத்துனரிடம் இதைச் சொல்லலாம் என்றிருக்கிறேன்' என்றாள் கிளாவிருந்தா.

கமலாபாய் பயந்துபோய், அசட்டுத்தனம் செய்துவிடாதே. இப்பொழுது தான் இரண்டு குடும்பங்களும் சற்று ஒற்றுமையாய்ப் பழகுகின்றன. நீ அவசரப்பட்டு ஏதாவது செய்தாயானால், பழையபடி இரண்டு குடும்பங்களுக்கும் மனஸ்தாபங்கள் உண்டாகும். அவன் நடவடிக்கைகளை நீ பெரிதாக எடுத்துக்கொள்ளாதே. வேண்டுமானால் நானே அவனிடம் சொல்லிவைக்கிறேன்' என்றாள். அவள் சொல்வதும் கிளாவிருந்தாவுக்கு நியாயமாகத்தான் பட்டது. ஆகவே பேசாமல் இருந்துவிட்டாள்.

ஆனால் இதற்கு முன்னரே கமலாபாய் திவானின் மனதில் சந்தேகம் என்ற நஞ்சு விதையை ஊன்றியிருந்தாள். இரு வீடுகளுக்கும் பின்னால் இருந்த கொல்லைப்புறங்களின் நடுவில் ஒரு தாழ்ந்த தென்னந்தட்டி வேலி இருந்தது. இதை மேலும் மூன்றடி உயரமாக்க கமலாபாய் உத்தரவிட்டாள். வேலை நடந்துகொண்டிருந்ததைப் பார்த்த திவான் அவளிடம் காரணத்தைக்

கேட்டார். 'கொல்லைப்புறத்தில் பெண்களுக்குப் போதுமான மறைவு இல்லை. மாதவராவ் அவர்கள் வீட்டுக் கொல்லையில் அடிக்கடி காணப்படுகின்றான். குறிப்பாக கிளாவிருந்தா நமது பின்புறத்துக்குப் போக நேரிடும் போதெல்லாம் அவன் அங்கே தோன்றுகிறான்' என்று சொல்லி வைத்தாள்.

கமலா நீ என்ன உளறுகிறாய்? தற்செயலாக நேர்ந்திருக்கும். மாதவராவ் அவளுக்கு மகனல்லவா?' என்றார் திவான்.

மகனென்பது தெரியாமலா கிடக்கிறது? உறவு எதுவாய் இருந்தால் என்ன, வயது வயது தான். சாரங்கதரானும் அவன் மாற்றாந்தாயும் காதலர்களானதாக புராணக்கதை இல்லையா? ஏன் இன்றுகூட அம்மாதிரி முறைகெட்ட காதல்கள் இல்லையாக்கும்? வாலிபர்களிலேயே நந்திதான் அழகானவன். உங்கள் பெண்டாட்டியோ ரதியாக இருக்கிறாள். எனக்கென்னவோ அவன் பார்வையே பிடிக்கவில்லை. பின்னே சும்மாவா, அந்தக் கிழட்டுச் சந்நியாசி இரண்டு பேருக்கும் முடிபோட நினைத்தார்?'

திவான் பதில் எதுவும் பேசாமல் போய்விட்டார். ஆனால் அம்பு கறி பிசகவில்லை என்று கமலாபாய் கண்டுகொண்டாள் அதனால் தான் கிளாவிருந்தா மாதவராவைப்பற்றி திவானிடம் புகார் சொல்லிக் காரியத்தைக் கெடுத்துவிடக்கூடாது என் பதில் கவனமாய் இருந்தாள். கிளாவிருந்தா வேண்டுமென்றே அந்த இளைஞனைத் தவிர்க்க முற்படுவதைக் கண்ட கமலாபாய், அதையும் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டாள். அவனைத் தனிமையில் சந்தித்து மனம்விட்டுப் பேசுவதுபோல் நஞ்சை ஊட்டத் தொடங்கினாள். பரிவுடனும் சர்வ ஜாக்கிரதையாகவும் பேசி அவன் நம்பிக்கைக்குப் பாத்திரமானவளாகத் தன்னைக் காட்டிக்கொண்டாள். இந்தக் காதலைப்பற்றித் தனக்கு முன்னாலேயே தெரியும் என்றும், இளமையும் அழகும் ஒன்றை யொன்று ஈர்ப்பதில் புதுமை ஒன்றும் இல்லை என்றும் கூறி வந்தாள். கிளாவிருந்தா தன் இதயத்தில் அவன்மீது ஆழ்ந்த காதல் கொண்டிருப்பதாகவும் தைரியமாக ஒரு போடு போட்டாள்.

அவள் அவனைத் தவிர்க்க முயல்வது, அவனைக் கண்டதும் அவளிடம் உண்டாகும் குழப்பம், அவன் எதிரில் அவள் கொள்ளும் அடக்க ஒடுக்கம் இவையெல்லாம் ஆழ்ந்த காதலின் சின்னங்களே என்றும், அந்தக் காதல் வெளிப்பட்டுவிடுமோ என்ற அச்சத்தினால்தான் அவள் அவ்வாறு நடந்துகொள்ளுகிறாள் என்றும் கூறினாள். அவனும் அவள் அருகில் இருக்கும் போது தன்னடக்கத்துடன் பொறுமையாக இருப்பது நல்லது என்றும், பாவம் அந்தப் பெண் காதலை மறைப்பதற்கு எத்தனை பாடுபடுகிறது, அதை நினைத்துப்பார்க்க வேண்டாமா என்றும் போதித்து வைத்தாள். 'எனக்கு ஒன்றும் தெரியாது என்று அவள் நினைத்துக்கொண்டிருக்கிறாள். ஆனால் அவள் பேதை உள்ளம் என் கண் முன்னால் படம் போல் விரிந்து கிடக்கிறது. காதலால் அவள் உள்ளம் பொங்கி அலைமோதித் தத்தளிப்பது எனக்குத் தெரியாதென்று நினைத்துவிட்டாள். பாவம், விதிசெய்யும் வேடிக்கைகளில் இதுவும் ஒன்று. இப்படியெல்லாம் நடப்பதை அந்த ஆண்டவனும் பார்த்துக்கொண்டிருக்கிறானே. நல்ல சோதிட சாஸ்திரம் வந்தது! அதனால் யாருக்கு என்ன பயன் என்று கேட்கிறேன். பெரிய பெரிய சோதிடர்கள் எல்லாம் சேர்ந்து எனக்கு நீடிய மணவாழ்வு உண்டு, பிள்ளையும் குட்டியுமாய் இருப்பேன் என்று சொன்னார்கள். ஆனால், நடந்தது என்ன? பதினெட்டு வயதிலேயே இந்த நிலைக்கு ஆளாகிவிட்டேன். உங்கள் காதல் எனக்கு விளங்குகிறது. என் அனுதாபம் எப்போதுமே உங்களுக்கு உண்டு. நீங்கள் இருவரும் ஒருவருக்கு ஒருவர் என்றே பிறந்தவர்கள். ஆனால் நீ பொறுமையாக இருக்கவேண்டும். என்னை நம்பு. நான் இதை எப்படியும் நிறைவேற்றி வைக்கிறேன். இதில் இன்னொரு சங்கடம் என்ன வென்றால், அவள் மணமானவள், உலகத்தார் பார்வையில் உனக்குச் சிற்றன்னை. அவளோ இந்தக் காதல் தவறு என்று நினைப்பதால் அதை நசுக்கிவிடவேண்டும் என்று பாடுபடுகிறாள். ஆனால் அது நடவாது. காதலின் சக்தியையும் உக்கிரத்தையும் அறியாததால் அந்தப் பேதைப் பெண் அப்படி நினைக்கிறாள். இன்னும் வெகு நாட்கள் அவளால் தாங்க முடியாது. இப்பொழுதே அது கொஞ்சம் கொஞ்சமாக வெளியாகிக்கொண்டிருக்கிறது.'

மாதவராவால் இதைக் கேட்டுக்கொண்டிருக்க முடியவில்லை. 'நான் ஊரைவிட்டு பங்களூருக்கோ, சத்தாராவுக்கோ போய் விடுகிறேன். எல்லாத் தொல்லையும் தீர்ந்துவிடும். நான் ஏன் அவள் கஷ்டத்துக்குக் காரணமாக இருக்கவேண்டும். இது பாவம் என்று தெரிந்தபிறகுகூட என்னாலே அடக்கமுடியவில்லையே! எல்லாம் பக்கத்திலேயே இருப்பதினால் வந்த வினை. எங்கேயாவது மாற்றல் வாங்கிக்கொண்டு போய்விட்டால் எனக்கும் நிம்மதி, அவளுக்கும் தொந்தரவு இல்லை' என்றான் விரக்தியுடன். 'சே, நீ இவ்வளவு கோழையாயிருப்பாயென்று நான் நினைக்கவேயில்லை' என்று முகத்தைச் சுளித்தாள் கமலாபாய்.

'ஒன்றைமட்டும் மறந்துவிடாதே. நீ காசிக்குப் போனாலும் சரி, கைலாயமலைக்கே போனாலும் சரி, இந்தக் காதலை உன்னால் உதறிவிடமுடியாதப்பா. இது பாவமென்று பயந்து விடாதே. அழகிய யுவதியான கிளாவிருந்தா வயதில் மூத்த உன் பெரியப்பாவை மணந்துகொண்டது ஆண்டவன் செயல் என்று சொல்லிவிட்டு மனித சமுதாயம் விலகிக்கொள்ளப் பார்க்கிறது. ஆனால் இப்படி பொருத்தமில்லாத அநியாயமான திருமணங்களை அனுமதிக்கும் சமுதாயம் அதன் விளைவுகளையும் அனுபவிக்கவேண்டும். கிளாவிருந்தா தன்னைக் காதலிப்பாள் என்று உன் பெரியப்பா எதிர்பார்க்கமுடியுமா? உன்னைப்போன்ற வாலிபன் அருகில் இருக்கும்போது அவள் அவரை விரும்புவாளா? இந்தக் காதல் இயற்கைக்கு விரோதமானதில்லையே? பிறகு இது எப்படிப் பாவமாகும்? நீ ஓடிப்போவதினால் முடிந்துவிடும் என்று நினைத்தாயா? அவளும் இதனால் மனக்கஷ்டம் அடைவாளே!'

என் உள்ளக்கிடக்கையை உனக்கு ஒளிக்காமல் சொல்லுகிறேன், கேள், என்னையும் உன் பெரியப்பாவையும் பற்றி உலகம் என்ன பேசுகிறது என்பது உனக்குத் தெரியும். அது உண்மையாகவே இருந்துவிட்டுப் போகட்டுமே. இந்த வீட்டில் கால்வைத்த அன்றே நான் அவரைக் காதலித்தேன். அப்பொழுது நீ குழந்தை. நடக்கத் தொடங்கியிருந்தாய். இத்தனை வருடங்களுக்குப் பின்னும் அந்த அன்பு இன்னும் மாறவில்லையே! உன் பெரியப்பா அப்பொழுது நல்ல ஷோக்கு வாலிபர். நான் அதைப் பாவம் என்று நினைக்கவும் இல்லை. ஒடிப்போகவுமில்லை. நாங்கள் இதுநாள்வரை இன்பமாகவே இருந்துவருகிறோம். இப்பொழுது இந்தப் புது மனைவி வந்து அவர் உள்ளத்தைக் கவர்ந்து கொண்டுபோவதைப் பார்த்துக் கொண்டு நான் சும்மா இருப்பேனா? அவள் அவரை

விரும்பவில்லை. அது திண்ணம். ஆனால் அவரோ அவள்மீது ஏக்கங்கொண்டிருக்கிறார். இது எனக்குத் தாங்கமுடியவில்லை. இப்பொழுது என் உள்ளத்தைத் திறந்து சொல்லிவிட்டேன். உங்கள் பரஸ்பரக் காதலை நிறைவேற்றிவைப்பதில் எனக்குச் சுயநல நோக்கம் உண்டு என்பதையும் தெரிந்துகொண்டுவிட்டாய். இப்போது என்னை நம்புவாய் அல்லவா? நான் விரைவில் உங்களை இணைத்துவைக்கிறேன். ஆனால் பொறுமையாக இரு என்று சொல்லி முடித்தாள். மாதவராவ் சிறிது நேரம் என்ன சொல்வது என்று தோன்றாமல் நின்றான். அவனது உயர்ந்த இயல்பு அவன் எதிரில் நின்ற அந்தப் பெண்ணையே வெறுத்தது. ஆனால் அவன் நெஞ்சில் பொங்கிய காதல் அதை அமுக்கிவிட்டுக் கொழுந்து விட்டெரிய ஆரம்பித்தது. கமலாபாய் விரித்த வலையில் விழுந்துவிட்டான்.

**ஆசை**

மார்கழி மாதம், மழை தினமும் ஊற்றிக்கொண்டிருந்தது. கங்காபாய் படுத்த படுக்கையாகிவிட்டாள். ஆஸ்துமா நோய் முற்றி இருமும்போது அப்படியே ஒருவேளை உயிர் நின்று விடுமோ என்றுகூட அச்சம் ஏற்பட்டது. திவான் இரவும் பகலும் மகள் படுக்கையின் அருகிலேயே இருந்தார். அலுவலகத்திற்கும் அரண்மனைக்கும் போவதை நிறுத்திக் கொண்டார். கமலாபாயும் கிளாவிருந்தாபாயும் முடிந்த வரை பணிவிடை செய்தார்கள்.

அதிகம் பாதிக்கப்பட்டவர் நரஹரிராவ்தான். கவனிக்க வீட்டில் பெரியவர்கள் இருக்கும் போது இளைஞனான கணவன் அவளுக்குப் பணிவிடைபுரிவது முறையாகக் கருதப்படவில்லை. தன் அனுதாபத்தையோ கவலையையோ அவளிடம் தெரிவித்துக்கொள்ள வழி இல்லாமலும் இருந்தது. வழக்கம்போல் தினமும் அலுவல்களைக் கவனிக்கச் சென்று கொண்டிருந்தார்.

ஒருநாள் இரவு பத்து மணி இருக்கும். தன் அறையின் மணவறைக் கட்டிலில் திண்டுகளின் நடுவில், கங்காபாய் காய்ச்சல் உக்கிரம் தாங்காமல் புரண்டு கொண்டிருந்தாள். உபச்சு இளைத்தது. ஊமத்தை இலைகளையும் கஞ்சா இலைகளையும் எரித்த புகையின் நாற்றம் அறையில் சுள்ளென்று அடித்தது. அறையின் ஒரே வாசலும், ஜன்னல்களும் சிக்கென்று சாத்தியிருந்தது. அறையின் ஒரு மூலையில் ஒரு குத்து விளக்கு மங்கலாக எரிந்தது. திவான் கட்டிலின் ஒரு ஓரத்தில் உட்கார்ந்திருந்தார். காய்ச்சல் வேகத்தில் புரண்டதால் நோயாளி நீக்கிவிட்ட கம்பளிப் போர்வையை மீண்டும் மீண்டும் அவள் மீது போர்த்திய வண்ணம் இருந்தார். கிளாவிருந்தா கட்டிலின் தலைமாட்டில் நின்று ஏதோ மருந்துகளைப் புகை போட்டுக் கொண்டிருந்தாள். கமலாபாய் கட்டிலின் மறுமுனையில் உட்கார்ந்திருந்தாள். வைத்தியர் இரவுச் சாப்பாட்டை முடித்துக்கொண்டு திரும்புவதாகச் சொல்லி அப்பொழுது தான் வெளியே போயிருந்தார். நிலைமை கவலைக்கிடமாகிக் கொண்டிருந்தது.

'அத்திம்பேரே, போய் கொஞ்சமாவது சாப்பிட்டு வாருங்கள். நான் கங்காவைப் பார்த்துக்கொள்கிறேன். இந்தப் பாழாய்ப்போன மழை நேரத்தில் சாப்பாடு ஆறி குளிர்ந்து விடும்' என்று கமலாபாய் கெஞ்சலாகச் சொன்னாள். திவான் நோயாளியின் கையை தன் மடிமீது போட்டு வருடிய வண்ணம், வறண்ட குரலில், 'எனக்கு பசிக்கவில்லை. பிறகு சாப்பிட்டுக்கொள்கிறேன் அல்லது பால் மாத்திரம் போதும்' என்றார். கமலாபாய் சிரத்தையுடன், 'நீங்கள் பட்டினிகிடப்பதால் அவளுக்கு ஏதாவது நன்மை உண்டா ? உங்கள் உடல் நலத்தையும் கவனித்துக்கொள்ள வேண்டுமல்லவா? அவள் விதி, அவள் அனுபவித்துத் தீரவேண்டும். ஒன்றும் செய்ய இயலாமல் நாம் பார்த்துக்கொண்டிருக்க வேண்டிய கொடுமையைச் சொல்லுங்கள். நமக்கு இருப்பது கண்ணன் மணியைப்போல் அருமையாக ஒன்றே ஒன்று. அவள் இப்படிப்படவேண்டிய திருக்கிறது. எல்லாம் ஆண்டவன் செயல். சாப்பிட்டோம் என்ற பேருக்காவது எதையாவது சாப்பிட்டு வையுங்கள். நேரமாகிறது' என்றாள். நோயாளியும் அவர் பக்கமாகக் கையை அசைத்துக் கண்ணே மூடினாள். தூக்க மருந்துகளின் புகை மிகுதியினால் அவள் புலன்கள் பலமிழந்திருந்தன. திவான் சில நிமிடங்கள் பார்த்துக்கொண்டிருந்தார். பின் கமலாபாயிடமும் தன் மனைவியிடமும் அவள் அமைதியைக் கலைக்க வேண்டாமென்று சொல்லிவிட்டு ஓசைப்படாமல் கதவைச் சாத்திய படி வெளியே சென்றார்.

சிறிது நேரத்தில் மாதவராவ் திடீரென்று கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தான். ஜரிகை வேஷ்டியும், ரோஜா வர்ணத்தில் கம்பளிச்சட்டையும், பனிக் குல்லாவும் அணிந்திருந்தான். எங்கேயோ பிரயாணம் போவதுபோலத் தோன்றியது. உரத்துப் பேச வேண்டாமென்று கமலாபாய் அவனுக்குச் சைகை செய்தாள். கட்டிலின் அருகிலிருந்த சிறு நாற்காலியில் உட்கார்ந்து, கிளாவிருந்தாவையே பார்க்கலானான். அவன் கண்கள் தன்மீது பதிந்திருப்பதை உணர்ந்த கிளாவிருந்தா, கரண்டியைக் கீழே வைத்து கதவைச் சாத்தி அறையைவிட்டு வெளியே சென்றாள். திவான் இரவு உணவுக்கு முன்னர் செய்யும் ஜெபம் சொல்லிக் கொண்டிருந்தார். மனைவி அறைக்குள் வந்ததைக் கண்டதும் 'கங்கா தூங்கிவிட்டாளா?' என்று கேட்டார்.

ஆமென்று சொல்லிவிட்டு அவருக்கு உணவு பரிமாறினாள். பாலும் சோறும் சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது 'அதோ இருமுகிறாளே! மறுபடியும் இருமல் வந்துவிட்டது. அடடா போய்ப் பார். நானும் வருகிறேன்' என்றார்.

நோயாளியின் அறையிலிருந்து வந்த ஓசை கிளாவிருந்தாவுக்கும் கேட்டது. கிளாவிருந்தா விரைந்தாள். எதிர்பாராத விதமாக அப்பொழுது தான் வேகமாக நோயாளியின் அறையிலிருந்து வெளியே வந்த மாதவராவோடு முட்டிக்கொண்டாள். சட்டென்று அதிர்ச்சியடைந்தவளாய் விலகி நின்றாள். மாதவராவ் தான் மௌனத்தைக் கலைத்தான்.

'நான் பட்டுக்கோட்டைக்குப் போகிறேன்' என்று சொல்லி நிறுத்தினான். 'கேள்விப்பட்டேன்' என்றாள் கிளாவிருந்தா பலஹீனமான குரலில்.

'இப்பொழுதே புறப்பட்டுவிட்டேன்' வண்டி காத்துக் கொண்டிருக்கிறது. உங்களிடமெல்லாம் சொல்லிக்கொள்ளத் தான் வந்தேன்.'

'அவள் பதில் எதுவும் கூறவில்லை. நான் திரும்ப வரப் பல மாதங்கள் ஆகும், பல வருடங்கள் கூட ஆகலாம்' என்றான். மூச்சு இரைத்தது. 'என்னை நினைவில் வைத்திருப்பாயா?'

சற்று அதிர்ச்சியுடன் அவனை ஏறிட்டுப் பார்த்து' நினைவில் வைத்திருப்பதா? நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?' என்று

விளங்காமல் கேட்டாள்.

'என்ன சொல்லுகிறேனோ? அப்படியானால் … நீ … நீ என்னை விரும்பவில்லையா? கடவுளே!'

'ஏன், ஒரு தாயைப்போல, உடன் பிறந்தவளைப்போல நான் உங்கள் மீது அன்பு கொண்டிருக்கிறேனே?' என்றாள் அவள். 'தாயைப்போல, உடன் பிறந்தவளைப்போல' என்று இயந்திரம் போல் முணுமுணுத்தான் அவன். உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தமுடியாமல் திகைத்தான். சில வினாடிகள் கழிந்தன. பின் திடீரென அவளை இழுத்துத் முத்தமிட்டான். பின் சட்டென அவளை விட்டு விட்டு, தலைவாசல் கதவைத் திறந்துகொண்டு பாய்ந்து வெளியில் சென்றுவிட்டான். கிளாவிருந்தா விடுபட்டு தன்னிலைக்கு வந்ததும் பயத்திலும் அவமானத்திலும் நடுங்கினாள். மூச்சு இரைத்தது, கண்களில் நீர் நிறைந்தது. நெஞ்சு படபடவென்று அடித்தது. அவன் போட்டிருந்த வெற்றிலை மணமும் காவியும் அவள் உதடுகளில் பதிந்திருந்தன. அதைத் தன் கைகளால் துடைத்துக்கொண்டு நின்றாள். இதற்குள் திவான் அங்கு வந்துவிட்டார். அவள் பரபரப்பைக் கண்ட அவர் கடுமையாக 'இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய், ஏன் இப்படி இருக்கிறாய்?' என்றார். அவளால் உடனே பதில் எதுவும் சொல்ல முடியவில்லை.

வாசல் கதவைத் திறந்துகொண்டு யாரோ வெளியில் போவதைப் பார்த்தேனே. மாதவனா அது?' என்று தொடர்ந்தார். 'ஆமாம்' என்றாள் மெல்லிய குரலில்.

இங்கே நீங்கள் இருவரும் என்ன செய்து கொண்டிருந்தீர்கள். நீ ஏன் நடுங்குகிறாய்?' என்றார் கோபமாக.

அவர் என்னிடம் மரியாதை இல்லாமல் நடந்து கொண்டார், அவமானப்படுத்தினார்.' கண்களிலிருந்து நீர் தாரையாக வடிந்திருந்தது. 'என்ன சொன்னான்? என்ன செய்தான்?'

வெளியூர் புறப்படுமுன் சொல்லிக்கொள்ள வந்ததாகச் சொன்னார். பின் என்னைப் பலவந்தமாகப் பிடித்து முத்தமிட்டார். நான் தற்கொலை செய்து கொள்வதுதான் சரி என்று கண்ணீர் விட்டாள் கிளாவிருந்தா.

திவான் கசப்பு நிறைந்த குரலில் 'ஓஹோ! காதலர் சந்திப்பை நான் வந்து கெடுத்துவிட்டேனாக்கும். அகப்பட்டுக் கொண்டதால் முதலைக்கண்ணீர் வடிக்கிறாயோ? அவன் முத்தங்கள் உனக்கு கசக்கிறதா, என்ன?' என்று குத்தலாகச் சொல்லிக்கொண்டே வாசலுக்குச் சென்றார்.

தெருவின் தெற்கு முனையில் வண்டி வேகமாகச் சென்று கொண்டிருந்தது தெரிந்தது. காளையின் கழுத்துமணி யோசையும் அவர் காதில் விழுந்தது. அவர் தம்பி அமாத்யாவும், அவர் குடும்பத்தில் மற்றும் சிலரும் அவர் வீட்டு வாயிலில் நின்றுகொண்டிருந்தார்கள். திவான் தம்பியைக் கூப்பிட்டார்.

அவர் உடனே வந்து 'கங்கா எப்படி இருக்கிறாள்? வைத்தியர் அப்படியேதான் இருப்பதாகச் சொன்னார். மழையும் காற்றும் நின்றபாடில்லை. மாதவனும் இன்று இரவு மழையில் அகப்பட்டுக் கொள்ளத்தான் போகிறான்' என்றார் . 'போவது அவன் வண்டியா?'

ஆமாம், உங்களிடமெல்லாம் அவன் விடைபெற்றுகி கொள்ளவில்லையா? அதற்காகத்தானே சற்று முன்பு அங்கு வந்தான்?' 'என்னிடம் விடைபெற்றுக்கொண்டு போகவில்லை. ஆனால் என் மானத்தை வாங்கிக்கொண்டு போய்விட்டான்.' 'என்ன அண்ணா? என்ன சொல்லுகிறீர்கள்?' 'என் மனைவியைக் கெடுக்க முயன்றிருக்கிறான். மாற்றாந்தாயிடம் பிரிவுபசாரமாம். ஹூம் இந்த அழகில் நடத்தியிருக்கிறான். அவளைப் பிடித்து முத்தமிட்டானாம். நான் திடீரென அவ்விடத்துக்கு வந்திருக்காவிட்டால் வேறு என்னவெல்லாம் செய்திருப்பானோ?' என்றார் திவான் கசப்புடன். 'நிஜமாகவா? இது உண்மையாக நடந்ததா?' என்றார் அமாத்யா.

'உண்மையேதான், நானே பார்த்தேன். எனக்குச் சிறிது சந்தேகம் தோன்றியதால் தான், அவனை அயலூருக்கு அனுப்பிவிடும்படி அப்பொழுதே உன்னிடம் சொன்னேன். மகாராஜாவும் இணங்கி அவனைப் பட்டுக்கோட்டைக்கு நியமனம் செய்தார். ஏதாவதொரு சாக்கையிட்டு நீ காலம் தாழ்த்திவிட்டாய். இப்பொழுது அனர்த்தமாகிவிட்டது. குலத்தைக் கெடுக்கிற கோடாரிக் காம்பாகத்தான் போகிறான் அவன்.' 'இப்படி நடந்துகொள்வான் என்று நினைக்கவே இல்லை. நம்பவும் முடியவில்லை. சரி, சரி அவன் தான் போய் விட்டானே. திரும்ப இன்னும் பல மாதங்களாகும். அதற்குள் அவன் மனைவி பெரியவளாகிவிடுவாள்' என்று சமாதானம் செய்தார் அமாத்யா.

'இங்கே என் மனைவி அழுது கொண்டிருக்கிறாள். இந்த அவமானத்தைத் தாங்கிக்கொண்டு உயிரோடிருப்பதைவிடத் தற்கொலை செய்து கொள்வது மேல் என்று அழுகிறாள். அதுவும், அவள் அவனுக்கு சிற்றன்னை முறையாகிறாள்! கலி முற்றிவிட்டது' என்றார் திவான்.



**தொடரும் ..**

# ஜான் கிறிஸ்தியான் அருளப்பன்

முனைவர் ஜான் ஜெயானந்தம்



நிற்பவர் J C அருளப்பன்

இந்திய மண்ணிலிருந்து கர்த்தர் எழுப்பிய அருளப்பன் அதிகமாக அறியப்படாத ஒருவராக இருக்கிறார். ஆகையால் சற்று விவரமாகவே காண்போம்.

பதினேழாம் நூற்றாண்டில் தஞ்சைப் பகுதி மராத்திய சிற்றரசர்களால் ஆளப்பட்டு வந்தது. சிவாஜி மன்னனின் ஒன்றுவிட்ட சகோதரன் வெங்கொஜி என்பார் இங்கு ஆண்டு வந்தார். அவருடைய வழி வந்தவர்களில் ஒருவரே பதினோராம் இராஜா சரபோஜீ ஆவார். இவ்வரசரின் சகோதரி அவருடைய ஆட்சியிலிருந்த ராஜபுத்திர படை தளபதியாகிய ரஞ்சித்சிங் என்பவரை மணந்து அர்ஜுன்சிங் என்னும் மகனைப் பெற்றாள். இந்த அர்ஜுன்சிங் அரசர் சரபோஜியின் மகளை மணந்து பின்னர் கத்தோலிக்கக் கிறிஸ்தவரானார். இவருக்கு ராயப்பன் என்று ஒரு மகன் இருந்தார். இவர் எட்டையாபுரம் காம நாயக்கன்பட்டியில் குடியேறினார். இவர் பின்னர் ஜெர்மன் மிஷனரியாகிய சுவார்ட்ஸ் (Dr.Schweartz) என்பாருடைய தொடர்பு பெற்று, இரட்சகர் இயேசு கிறிஸ்துவின் அருட் செய்தியைக் கேட்டு இரட்சிக்கப்பட்டார். நல்ல பக்திமானாக இருந்த இவர், தன் ஊரில் சொந்த செலவில் ஒரு ஆலயத்தைக் கட்டிக் கொடுத்து ஆண்டவர் இயேசு கிறிஸ்துவுக்கு மெய்யான ஊழியராகத் திகழ்ந்தார். பின்னர் இவர்கள் குடும்பம் உக்கிரங்கோட்டை பகுதிக்கு ஊழியத்தின் நிமித்தம் அனுப்பப்பட்டனர். இவருக்கு பிறந்த நான்கு ஆண் மகன்களில் ஒருவரே அருளப்பன் ஆவார். இவருக்கு ரேச்சல் என்ற ஒரு சகோதரியும் இருந்ததார்கள். இவருக்கு ரேனியஸ் துரையிடம் கிடைத்த அறிமுகத்தின் மூலம் நல்ல கிறிஸ்தவ பண்புகளில் வளர்ந்தவராக இருந்தார்.

விசுவாச பெற்றோராகிய ராயப்பனுக்கு யோவான் கிறிஸ்தியான் அருளப்பன் 1810 ஆம் ஆண்டு பிறந்தார். இவருடைய கல்வி மிஷனரி ரேனியஸ் அவர்கள் ஆரம்பித்தப் பள்ளியில் ஆரம்பமாகியது. இவர் ஸ்கோப்பர் (Schaffter) அவர்கள் பையன்களுக்காக ஏற்படுத்திய பள்ளியில் கற்று ஆங்கில மொழி அறிவிலும் சிறந்து விளங்கினார். 1825 ஆம் ஆண்டில் ரேனியஸ் அவர்கள் பாளையங்கோட்டையில் ஆரம்பித்திருந்த செமினரியில் தனது 15-ஆம் வயதில் சேர்ந்து, வேத அறிவிலும் வல்லவரானார். இவர் தனது 15 வயதிலேயே ஊழியப் பணியில் உத்வேகத்துடன் ஈடுபடலானார். இவரை இறை ஊழியத்தில் பக்குவப்படுத்தியதில் ரேனியஸ் அவர்களுக்கு பெரும் பங்கு இருந்தது. இவர் ஆங்கில மொழியிலும் திறமைப் பெற்றவராக இருந்தார். மேல் நாட்டு அருளுரையாளர்கள் எத்தகைய துடிப்புடன் அருளுரையை ஆங்கிலத்தில் ஆற்றுகின்றனரோ அதே துடிப்புடனும் உணர்வுடனும், அருளப்பன் அதைத் தமிழில் மொழிப்பெயர்ப்பார் என்று அவரது திறமை விவரிக்கப்பட்டிருக்கிறது.

**ஏ. என். குரோவ்ஸ்**

பம்பாயில் இருந்து வந்த அந்தோனி நாரீஸ் குரோவ்ஸ் (Antony Norris Groves) என்பாரை அருளப்பன் சந்திக்கும் நல் வாய்ப்பைப் பெற்றார். இங்கு மிஷனரி குரோவ்ஸ்சைப் பற்றிய சில விவரங்களை நாம் காண வேண்டியது அவசியமாகிறது.

டென்மார்க்கு அரசர் கிறிஸ்துவின் அருட்செய்தியை இந்தியாவில் அறிவிப்பதற்காக சீகன்பால்கு அவர்களையும் மற்றும் பலரையும் தரங்கம்பாடிக்கு அனுப்பினார். டேனிஷ் ஹாலே மிஷனரி சங்கத்தின் மூலம் எனவே, இந்த அருட்பணியாளர்களின் தேவைகளையும், இறைப்பணிக்கு ஆகும் செலவு, ஆலயம் கட்டும் செலவு, மொழிபெயர்ப்பு, இலக்கியங்கள் ஆயத்தம் செய்யும் செலவு யாவற்றையும் அவ்வரசர் தனது அரச நிதியிலிருந்து அனுப்பி ஊழியத்தைத் தாங்கி வந்தார். S.P.G.. மற்றும் C.M.S ஆங்கில திருச்சபை நிறுவனத்தாரின் சார்பில் தமிழ் நாட்டிற்கு வந்த மிஷனரிகளின் ஊழியச் செலவுகள் அனைத்தையும் அச்சபையாரும் அந்த நிறுவனங்களும் பொறுப்பு ஏற்று உதவி வந்தன. மற்றும் இத்தகைய தலைமைப் பீடங்கள் தங்கள் ஊழியரையும், குருமார்களையும் அனுப்புதலும், பேராயர்களை நியமிப்பதும், அவர்களை ஒரு ஊரிலிருந்து மற்றுமொரு இடத்திற்கு மாற்றுவதும் இந்த நிறுவனங்களின் ஆளுகைக்கு உட்பட்டிருந்தது. ஒவ்வொருவருக்கும் இன்ன இன்ன பொறுப்புகள் வழங்குவதும் அந்த மிஷன் நிறுவனத்தின் கட்டளையின்படி நிறைவேறி வருகின்றன.

இத்தகைய முறையை நமது வேதாகமத்தின் புதிய ஏற்பாடு கற்பிப்பதில்லை. பவுலும் பர்னபாவும் கர்த்தருடைய ஊழியத்திற்கு அழைத்து பிரித்து வைக்கப்பட்ட போது, நாம் அப்போஸ்தலர் 13-ஆம் அதிகாரத்தில் காண்கிற வண்ணமாக, அவர்கள் அந்தியோகியா சபையின் ஐக்கியத்தில் இருந்தபோதிலும், இன்ன இன்ன

நாடுகளுக்கோ, ஊர்களுக்கோ நீங்கள் செல்ல வேண்டும் என்ற கட்டளை அவர்களுக்கு அச்சபை கொடுக்கவில்லை. இத்தகைய முறையில் அவர்கள் ஊழியத்தை நிறைவேற்ற வேண்டும் என்றும் அவர்களைக் கட்டுப்படுத்தவில்லை. ஆவியானவர் அவர்களை வழிநடத்தினபடி அவர்கள் சென்று வசனத்தைப் பரப்பினர். அவர்கள் பிரிகியா, கலாத்தியா நாடுகளைத் தாண்டி பிந்தினியா செல்ல முயன்றபோது, ஆவியானவர் அவர்களைத் தடை செய்தார் (அப். 16:6-7). பின் ஆவியானவரின் நடத்துதலின்படி அவர்கள் மக்கெதோனியா நாட்டுக்குச் சென்றனர். தங்கள் ஊழியத்திற்குக் கர்த்தர் வாசல் திறந்து கொடுத்த இடங்களுக்குச் சென்று உழைத்தனர். ஆத்துமாக்களை ஆதாயப்படுத்தினர். சபைகளை உருவாக்கிப் போதித்தனர். இவர்களுடைய சரீரத் தேவை, ஊழியத் தேவை இவை யாவற்றிற்கும் கர்த்தரையே சார்ந்து இருந்தனர். பவுல் தன்னுடைய உழைப்பின் மூலம் தனக்கும் தன்னோடு இருந்தவர்களின் தேவைகளை சந்தித்தார் (அப். 20:34). மற்ற சபையார்களும் அவர்களுக்கு உதவி இருக்கின்றனர் (பிலி. 4:16). இன்றும் புதிய ஏற்பாட்டு முறைமையின்படி இயங்கும் கிறிஸ்தவ சபைகளிலும் இத்தகைய நடைமுறையே நிலவி வருகிறது.

இங்கிலாந்திலிருந்து வந்த மிஷனரி அந்தோனி நாரீஸ் குரோவ்ஸ் இத்தகைய விசுவாசத்தோடு ஊழியத்தில் இறங்கியவர். இவருடைய சகோதரி மேரி என்பாரே, சிறு பிள்ளைகளின் காப்பகத்தை விசுவாசத்தால் பிரிஸ்டல்ஸ் (Bristol) நகரத்தில் நடத்தி வந்த ஜார்ஜ் முல்லர் என்பாரைத் திருமணம் செய்திருந்தார்.

இவர் பின்னர் 'விசுவாச மிஷனரிகளின் தகப்பன் (Father of Faith Missions) என்ற பெயருடன் வரலாற்றில் அறியப்பட்டிருக்கிறார்.

ஆந்திர மாநிலத்தில் அரச அதிகாரியாகவும் பணியாற்றிய சர் ஆர்தர் காட்டன் (Sir Arther Cotton) என்பார் மூலம் இந்தியா வந்த குரோவ்ஸ் மற்றும் சில மிஷனரிகளின் உதவியுடன் சித்தூர் பகுதியில் ஒரு மிஷன் மையம் அமைத்து உழைத்து வந்தனர்.

இவர் தென் நெல்லை வந்திருந்த போது மிஷனரி ரேனியஸ் ஐயருடைய தொடர்பு அவருக்கு கிடைத்தது. ரேனியஸ் அவர்களும் அவருடன் நெருங்கி பழகி, அவருடைய விசுவாச ஊழிய முறையினால் அதிகமாகக் கவரப்பட்டிருந்தார். அச்சமயத்தில் இவர் அருளப்பனின் வாஞ்சையையும் திறமையையும் அறிந்து அவரை தனது மொழிபெயர்ப்பாளராகத் துணைக்கு அழைத்துக் கொண்டார். இவ்வாறு அருளப்பன் சித்தூர் செல்லும் வழி திறந்தது.

சித்தூரில் விஜய நகர அரச குடும்பத்தைச் சார்ந்த அனுசுயா என்ற பெண் இரட்சிக்கப்பட்டு, தன் அரச குடும்பத்தாரால் விலக்கி வைக்கப்பட்டு அனாதையாக இருந்தார்கள். அருளப்பன் அவர்களை ஏற்றுக்கொள்ள, இவர்களின் திருமணம் 1840-இல் நடைபெற்றது. அச்சமயத்தில் அருளப்பனுக்கு வயது 30. இத்தம்பதியினரின் குடும்ப வாழ்க்கையில் 11 பிள்ளைகள் பிறந்தனர். அவர்களில் மூவர் சிறு வயதிலேயே இறந்துவிட்டனர். மீதி எண்மரில் இருவர் ஆண்கள்.

அருளப்பன் குரோவ்ஸ் புதிய ஏற்பாட்டு முறைமையின் திருச்சபை சத்தியங்களை நன்கு கற்று, அதன்படி தன் வாழ்க்கையையும், ஊழியத்தையும் அமைத்துக் கொண்டு மிகவும் பயனுள்ள ஊழியத்தை நிறைவேற்றி வந்தார்.

ஒருமுறை தெரு முனையில் ஆங்கிலேயே அருளுரையாளருக்கு அழகாக தமிழாக்கம் செய்து கொண்டிருக்கையில் ஒரு சிலர் 'ஐயா, நாங்கள் கிறிஸ்தவர்கள் ஆக விரும்புகிறோம். ஆனால் எங்களுக்கும் பணம் கொடுப்பீர்களா?' என்று கேள்வியை எழுப்பினர். இச்செய்தியை கேட்டுக் கொண்டிருந்த இரண்டு உயர்குடி பிராமணர்கள் இக்காட்சியைக் கண்டு கொதித்தெழுந்தனர். அவர்களில் ஒருவர் அருளப்பனைப் பார்த்து 'இந்த வெள்ளையன் உனக்குச் சம்பளம் கொடுப்பதினால் அல்லவா நீ கிறிஸ்தவனாக இருக்கிறாய்? இல்லாவிட்டால் இந்த வேலை செய்வாயா?' என எரிச்சலுடன் வினவினார்.

இதற்கு பதிலாக அருளப்பன் 'நான் நிச்சயமாக கிறிஸ்துவுக்காக ஊழியம் செய்வேன், இந்த நிமிடம் முதல் மொழி பெயர்ப்புக்கு என்று சம்பளம் ஒருபோதும் நான் வாங்க மாட்டேன்' என்று சபதம் செய்தார். அந்த நாள் முதல் அவர் தனது இறுதி மூச்சு வரை மிஷனரிகளிடமிருந்து சம்பளம் வாங்கியதே இல்லை.

இத்தகைய பின்னணியுடனும், பயிற்சியுடனும் தேவ அழைப்பைப் பெற்றிருந்த அருளப்பன் தன் தகப்பனார் குடியேறிய உக்கிரன்கோட்டைப் பகுதியில் வந்து இப்பகுதியில் மிகவும் பயனுடைய ஊழியத்தை நிறைவேற்றியுள்ளார்.

மிஷனரி குரோவ்ஸ் மூலம் புதிய ஏற்பாட்டுச் சத்தியங்களுக்கு இசைய இவரும் எந்த மிஷனரி சங்கங்களிலும் இணையாமலும், மேல் நாட்டு இறை ஊழியர்களிடமிருந்து சம்பளம் வாங்காமலும், கர்த்தருக்காக உழைத்தார். இவர் மூலம் இரட்சிக்கப்பட்டவர்களும் அத்தகைய முறையிலேயே சபையாக இயங்கி வந்தனர்.

அருளப்பன் கிறிஸ்தியான் பேட்டையில் இருக்கையில் ஓர் இரவு தன் பிள்ளைகளுக்கு ஆகாரம் கொடுக்க வீட்டில் ஒன்றும் இல்லை என்பதை அருளப்பனின் மனைவி அறிந்தாள். அவள் தன் கணவரைத் தேடிப்போகையில் அவர் இரண்டாம் மாடி அறையில் ஜெபித்துக் கொண்டிருக்கக் கண்டாள். அத்தருணத்தில் தான் என்ன செய்ய வேண்டும் என அறியாது திகைத்தாள். கணவரின் ஜெபத்தைக் கலைக்க அவள் விரும்பவில்லை. அதே சமயத்தில் தன் பிள்ளைகளை பட்டினியாக விடவும் மனம் இல்லை. எனவே தன்னுடைய உடனடித் தேவைக்காக அமைதியாக ஜெபிக்கலாயினாள். அச்சமயத்தில் தன் வீட்டு வாசலில் ஒரு மாட்டுவண்டி வந்து நிற்கும் சத்தம் கேட்டது. தங்கள் தேவைக்கு மிஞ்சிய அளவில் பலவகையான சமைத்த ஆகாரம் அந்த வண்டியில்



கிறிஸ்தியான் பேட்டை சபை



இந்தியாவில் முதன் முதலில் கட்டப்பட்ட கிறிஸ்தவ சகோதர ஐக்கிய சபை (184:

வந்திருந்தது. அருகில் இருந்த ஒரு கிராமத்தில் நடைபெற்ற திருமணத்தில் ஆகாரம் அதிகமாகிவிட்டதால் அந்த திருமண வீட்டார் மீந்த ஆகாரத்தை அருளப்பன் வீட்டாருக்கு கொடுக்கும்படி அனுப்பியிருந்தனர். 'சிங்கக் குட்டிகள் தாழ்ச்சியடைந்து பட்டினியாக இருக்கும். கர்த்தரைத் தேடுகிறவர்களுக்கோ ஒரு நன்மையும் குறைவுபடாது' (சங்கீதம் 34:10). இதற்கு ஒத்த ஒரு அனுபவம் பிரிஸ்டல் ஜார்ஜ் முல்லர் அநாதை விடுதியிலும் நடைபெற்றது அல்லவா! எனவே இவரை 'இந்தியாவின் ஜார்ஜ் முல்லர்' என அழைப்பது மிகப் பொருத்தமாக இருக்கும்.

**அருளப்பனின் ஊழியம்:**

இவர் தன் விசுவாசத்திற்காக பல பாடுகளை சகிக்க வேண்டியிருப்பினும், கர்த்தருடைய நாமத்தை அவர் மிகவும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டார். இவர் தனது திருமணத்திற்கு பின்னர் 1840 ஆம் ஆண்டிலிருந்து சுயேட்சையாக ஊழியம் செய்ய ஆரம்பித்தார். உக்கிரன்கோட்டைக்கு அருகில் 1842-ஆம் ஆண்டில் நிலங்களை வாங்கி ஒரு கிறிஸ்தவ கிராமத்தை உருவாக்கி அதற்கு கிறிஸ்தியான் பேட்டை என்று பெயரிட்டார். அந்த நிலம் வானம் பார்த்த வறண்ட பூமியாக இருந்தபடியால், அங்கே ஓர் ஏரியையும் உருவாக்கி அதைச் சுற்றிலும் கரையமைத்து பனை மரங்களை நட்டார். அங்கு சபைக்காக ஒரு ஆலயமும் கட்டப்பட்டது,

அந்த நிலத்தின் பரப்பளவு சுமார் 200 ஏக்கர் இருக்கும் எனக் கருதப்படுகிறது. அவர் அங்கே தான் குடியிருக்க பெரிய பங்களா மாதிரியான வீட்டையும் கட்டி வாழ்ந்தார். இவர் முற்றிலும் கர்த்தர் ஒருவரையே சார்ந்து வாழ்ந்தார். இந்த கிராமத்தில் ஒரு விவசாயப் பள்ளியை ஆரம்பித்து பலருக்கு வேலை வாய்ப்புத் தேடிக் கொடுத்தார். அங்கு ஒரு ஆலயத்தையும் கட்டினார். அந்த ஆலயம் இப்பொழுது புதுப்பிக்கப்பட்டு இருக்கிறது.

1859 ஆம் ஆண்டில் இவரது உழைப்பில் 33 மூன்றுக்கு மேலான கிராம சபைகள் இருந்தன. அவற்றில் சில கிறிஸ்தியான் பேட்டையை விட்டு 100 மைலுக்கு அப்பாலும் இருந்தன. இவர் இரட்சிக்கப்பட்டு வந்தவர்களுக்கு சபையை நடத்துவதற்குப் பழக்கப்படுத்தி அவர்களாகவே ஆராதனை நடத்த பழக்கப்படுத்தியிருந்தார். ஆவியானவர் தனி விசுவாசிகளுக்குக் கொடுத்திருக்கும் சுவிசேஷ ஊழியம், போதிக்கும் ஊழியம் இவற்றை பயன்படுத்தி சபைகள் வேதாகம அறிவிலும் விசுவாசத்திலும் வளரும்படி செய்தார். ஆவியில் பிறந்த எல்லா விசுவாசிகளும் கடவுளுக்கு முன்பாக அரசர்களாகவும், ஆசாரியர்களாகவும் இருக்கின்றனர் என்று வேத வசனம் உறுதி செய்கிறது அல்லவா (1 பேது. 2:5,9; வெளி. 1:6).

இவருடைய ஊழியம் அவ்வெல்லையில் பரந்து விரிந்து இருந்தது. பல கிராமங்களில் சிறு சிறு சபைகள் உருவாயின. இவருடைய பெயரைத் தாங்கிய அருளாச்சி, அருள்புத்தூர் போன்ற புதிய குடியிருப்புகள் எழுந்து அவற்றின் மூலம் சுவிசேஷம் அவ்வட்டாரங்களில் பரவியது.(அட்டவணை பின் பக்கம்)

**கேரளா எல்லையில் எழுப்புதல்**

அருளப்பன் நல்ல எழுப்புதல் பிரசங்கியாராக இருந்தார். இவரது ஊழிய எல்லை தமிழ் நாட்டில் மட்டுமன்று, கேரளா தென் திருவாங்கூர் எல்லையிலும் பரவி இருந்தது. இவர் கேரளா செல்லும் வழி நெடுக சுவிசேஷம் அறிவித்து சென்றார். தெருமுனைகளிலும் ஆலயங்களிலும் அவர் அருட்செய்தியை பிரசங்கித்தார். சில இடங்களில் இவரது கூட்டங்களில் 500 முதல் 700 பேர்கள் வரை கூடி வந்து வாஞ்சையுடன் வசனத்தைக் கேட்டனர். இவருக்கு உதவியாக மரியான், மைக்கேல், ஆக்கில்லா என்போரும் இருந்தனர். இவரது முதல் கேரளா பயணம் 1853 ஆம் ஆண்டில் நிகழ்ந்தது. அவரது பயணச் செலவுகளை கர்த்தர் ஆச்சரியமான முறையில் சந்தித்தார்.

அருளப்பன் மீண்டும் 1859 ஆண்டிலும் கேரளா சென்று எழுப்புதல் கூட்டங்களை நடத்தினார். கேரளாவில் உள்ள அகூர் மாசிலாமணி என்பார், 'திருவாங்கூர் திருச்சபை வரலாறு' என்ற நூலில் இவ்வாறு பதிவு செய்திருக்கிறார்: 'அருளப்பன் அவர்கள் கர்த்தருடைய இரண்டாம் வருகையைக் குறித்து வழங்கிய செய்திகள் மிகவும் கவர்ச்சியாக இருந்தன. கேரளாவில் உள்ள கிறிஸ்தவர்கள் ஆண்டவர் இயேசு கிறிஸ்து மீண்டும் வந்து ஆயிரமாண்டுகாலம் பூமியில் ஆட்சி செய்வார் என்ற வேதாகமச் செய்தியை முதல் முறையாக கேட்டனர்' என்று பதிவு செய்திருக்கிறார்.

இவருடைய கூட்டங்களில் பரிசுத்த ஆவியானவரின் அசைவு இருந்தது. இவருடைய பயணத்தின்போது நாகர்கோவிலில் ஒரு ஆச்சரியமான சம்பவம் நடைபெற்றது. ஒரு செல்வந்தர் அருளப்பனுக்கு ஒரு விருந்தை ஆயத்தம் செய்திருந்தார். அச்சமயத்தில் அருளப்பன் ஆகாரத்திற்காக கடவுளுக்கு நன்றி கூறுகையில் விருந்தை ஆயத்தம் செய்த அந்த செல்வந்தரின் ஆசீர்வாதத்திற்காக ஜெபிக்கவில்லை என்று பந்தியில் இருந்த ஒருவர் வருத்தம் தெரிவித்தார். அதற்கு அருளப்பன் கொடுத்த பதில் இது. 'கர்த்தருடைய கட்டளைக்கு இணங்க காகங்கள் எலியாவுக்கு இறைச்சியை கொண்டு வந்து கொடுத்தன. இதற்காக காகங்களுக்கு நாம் நன்றி சொல்ல வேண்டுமா?'

அருளப்பன் 1853 ஆண்டில் கேரளா சென்று திரும்புகையில்

நாகர்கோவிலில் இருந்த மிஷனரி மால்ட் (Mr. Mault) என்பாரைச் சந்தித்து அவரிடமிருந்த ஒரு மர அச்சு இயந்திரத்தை ரூ.20க்கு வாங்கி தனது கிறிஸ்தியான் பேட்டை வீட்டில் நிறுவினார். அந்த அச்சு இயந்திரத்தைப் பயன்படுத்துவதற்கு சிலரைப் பயிற்சிப்பதற்காக மால்ட் துரை அதை இயக்கும் முறையை அறிந்திருந்த ஒருவரை கிறிஸ்தியான்பேட்டைக்கு அனுப்பி உதவினார். இவ்வாறு சில கைத்தாள்களையும், சுவிசேஷ பிரதிகளையும், வேறு சிறு புத்தகங்களையும் அச்சிட்டு வினியோகித்து சுவிசேஷம் பல இடங்களில் பரவ உதவினார்.

**அருளப்பனின் சமூகத் தொண்டு:**

இவை மட்டுமின்றி அருளப்பன் சில கிராமங்களில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் தங்கும் பள்ளிகளை நிறுவி, கல்வித் துறையிலும், பலருக்கும் உதவினார். பெண்களின் கல்வியின் அவசியத்தை அவர் அறிந்திருந்தார். இவருடைய ஒரு மகள் பிற்காலத்தில் சென்னையில் ஒரு ஆசிரியையாக இருந்துள்ளார்.

அருளப்பன் இன (ஜாதி) வேற்றுமையை அதிகக் கடுமையாக எதிர்த்தார். எல்லா விசுவாசிகளும் பரலோக தந்தையின் பிள்ளைகள் என்றும், எல்லோரும் ஒரே இரட்சகரின் மூலம் இரட்சிக்கப்பட்டவர்கள் என்றும் அழுத்தமாகப் போதித்து நடைமுறைப்படுத்தி வந்தார். ஜாதியை பார்க்கிறவர்கள் கர்த்தருடைய பிள்ளைகள் அல்ல என்று கூறுவார். இவர் இயற்றி இருக்கும் மூன்று கீர்த்தனைகளை முனைவர் யோ. ஞான சந்திர ஜான்சன் பதிப்பித்துள்ள 'கிறிஸ்தவத் தமிழ்க் கீர்த்தனைகள் ஓர் ஆய்வுப் பதிப்பு' நூலில் இடம் பெற்றிருக்கிறது.

'மேக மீதில் இயேசு இராஜன் வேகம் வாராரே'

என்ற பல்லவியில் துவங்கும் பாடல் இவர் இயற்றியதாகும். இவர் இந்திய மண்ணில் பிறந்த இந்தியராக இருப்பினும், மேல் நாட்டவர்களைப் போல் பரந்த காட்சி உடையவராக, பல துறைகளிலும் ஈடுபட்டு வந்தார். இவர் தன் அனுதின வாழ்க்கைக் குறிப்புகளை ஒழுங்காக ஆங்கிலத்தில் எழுதி வந்தார். இதனை இங்கிலாந்தில் இருந்த திருவாளர் G.H லாங் (G.H.Lang) என்பார், The History and Diaries of an Indian Christian J.C. Arulapan" என்ற தலைப்பில் புத்தகமாக வெளியிட்டிருக்கிறார்.

இவ்வாறு கர்த்தருக்காக அதிக ஊக்கமாக உழைத்த இறை ஊழியர் தனது 57 ஆவது வயதில் 1867 ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 14 ஆம் தேதி தன் ஆண்டவர் பாதம் அடைந்தார்.

ஆண்டவராகிய எஜமான் "நல்லது, உத்தமும் உண்மையுமுள்ள ஊழியனே! கொஞ்சத்திலே (நீ) உண்மையாக இருந்தாய், அநேகத்தின் மேல் உன்னை அதிகாரியாக வைப்பேன். உன் எஜமானுடைய மகிழ்ச்சியில் பிரவேசி" என்ற அழைப்பின் சத்தம் அவர் காதுகளில் நிச்சயமாகத் தொனித்திருக்கும்.

அருளப்பன் போன்ற சுதேச வைராக்கியமுள்ள பிரகாசிக்கும் எழுப்புதல் ஊழியர்கள் இன்றும் தமிழ்நாட்டில் எழுந்து பிரகாசிக்க வேண்டும்!! இன்றைய அவசர தேவை இவர்களே!

| எண் | ஊர்களின் பெயர்கள் | கிறிஸ்தியான் பேட்டையிலிருந்து மைல் தொலைவு | சிறுவர் உட்பட கிறிஸ்தவர்களின் எண்ணிக்கை | எண் | ஊர்களின் பெயர்கள் | கிறிஸ்தியான் பேட்டையிலிருந்து மைல் தொலைவு | சிறுவர் உட்பட கிறிஸ்தவர்களின் எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | கிறிஸ்தியான் பேட்டை | 1/4 | 30 | 17. | பந்துவார்ப்பட்டி | 31 | 11 |
| 2. | புதுப்பட்டி | 1 | 20 | 18. | அச்சன்குளம் | 30 | 7 |
| 3. | அர்ச்சனாபுரம் | 1 | 1 | 19. | இளவரநேந்தல் | 32 | 6 |
| 4. | வீரகாபுரம் | 2 | 14 | 20. | ராமதேவன்பட்டி | 26 | 3 |
| 5. | கோட்டூர் (கோட்டையூர்) | 4 | 20 | 21. | கோட்டமடக்கி | 28 | 4 |
| 6. | கொண்டராயன்குளம் | 8 | 20 | 22. | புல்லபொட்டல் | 24 | 3 |
| 7. | மங்களம் (மகாலிங்கபுரம்) | 10 | 5 | 23. | தூரயெஹமிபுரம் | 20 | 37 |
| 8. | களங்காபுரம் (கான்சாபுரம்) | 10 | 2 | 24. | அருள்புத்தூர் | 25 | 97 |
| 9. | திரன்லாங்குளம் (நெடுங்குளம்) | 9 | 1 | 25. | மங்கோடு | 26 | 7 |
| 10. | சிவகாசி | 16 | 7 | 26. | நாளமங்கலம் | 24 | 2 |
| 11. | ஏழாயிரம் பண்ணை | 30 | 20 | 27. | எட்டிச்சேரி | 27 | 57 |
| 12. | சிவசங்குப்பட்டி | 29 | 31 | 28. | ஒளக்குளம் | 47 | 92 |
| 13. | பண்டையப்பட்டி | 29 | 100 | 29. | தாட்சநல்லூர் | 60 | 5 |
| 14. | பள்ளக்கவுண்டன்பட்டி | 28 | 27 | 30. | அமட்டவண்ணகோசேர்படி | 90 | 4 |
| 15. | பாறைப்பட்டி | 29 | 8 | 31. | அருளாச்சி | | |
| 16. | ஒவைநாயக்ககன்பட்டி | 38 | 5 | | மொத்தம் | | 673 |

# தமிழிசைப்

## பாடல்கள் மூலம் இறை பணி செய்த சபை ஊழியர்கள்



J.ஜான் ஞானராஜ்

### தென் தமிழகத்தில் தமிழிசைப்பாடல்களின் தொடக்கம்

தென் தமிழகத்தில் தொடக்க காலத்தில் (18,19 ஆம் நூற்றாண்டுகளில்) நற்செய்திப் பணி ஆற்றியவர்கள் ஜெர்மானிய அருட்பணியாளர்களும் ஆங்கிலேய அருட்பணியாளர்களும் ஆவர். அவர்கள் தமது தாய்மொழியான ஜெர்மன் மற்றும் ஆங்கில மொழி கிறிஸ்தவப் பாடல்களை தமிழ் மொழியாக்கம் செய்து மேற்கத்திய இசையில் அப்பாடல்களை தமிழ் கிறிஸ்தவர்களுக்கு கற்றுக்கொடுத்தனர். அப்பாடல்கள் ஞானப்பாட்டு என அக்காலத்தில் அழைக்கப்பட்டது. பின்னர் அவை பாமாலை என அழைக்கப்பட்டது.

தமிழிசையாம் கர்நாடக சங்கீதத்தில் அக்காலத்து தமிழ் கிறிஸ்தவ சபை ஊழியர்கள் பாடல்களை இயற்றி அவற்றை சபை மக்களுக்கு கற்றுக் கொடுத்தனர். ஜெபக் கூட்டங்களில் பாடினர். கீர்த்தனைப் பாடல்கள் கைப்பிரதி பாடல்கள் என அவை அழைக்கப்பட்டன.

பங்களாச்சுரண்டை தேவாலய ஆராதனையில் கீர்த்தனை பாடல்கள் பாடப்படுதல் ஐரோப்பிய குருமார்கள் தேவாலய ஆராதனையில் கீர்த்தனை பாடல்களை பாடுவதற்கு அனுமதி அளிக்காத நிலையில் பங்களாச்சுரண்டையில் நடைபெற்ற ஒரு சம்பவம் தமிழிசை கீர்த்தனை பாடல்கள் தேவாலய ஆராதனையில் பாடுவதற்கு காரணமாக அமைந்தது. 1861 இல் சுரண்டை சர்க்கிள் மிஷனரியாக இருந்த கனம். டிக்கன்ஸ் ஐயரவர்களும் அவரது நண்பர் கனம். சிம்மன்ஸ் ஐயரவர்களும் பங்களாச்சுரண்டை மிஷன் பங்களாவில் இருந்தபோது பங்களாவுக்கு அருகில் இருந்த போர்டிங் பள்ளி மாணவர்கள் தமிழிசை கீர்த்தனை பாடல்களை சத்தமாக இனிமையாகப் பாடிக்கொண்டிருந்ததைக் கேட்டு மகிழ்ச்சி அடைந்தார்கள் தமிழிசை கீர்த்தனை பாடல்களை தேவாலய ஆராதனையில் பாடவேண்டிய அவசியத்தை உணர்ந்து அவற்றை ஆராதனையில் பாடுவதற்கு அனுமதி அளித்து ஊக்கப்படுத்தினார்கள். சுரண்டையில் இருந்து C.M.S வட்டார சபைகள் முழுவதிலும் தமிழிசை கீர்த்தனை பாடல்கள் பாடும் வழக்கம் இவ்வாறு பரவியது.

இப்பாடல்கள் பாடும் வழக்கம் பரவுவதற்கு கிராம சபைகளின் உபதேசிமார்களும் கிராம பள்ளிக்கூடங்களின் ஆசிரியர்களும் காரணமாயிருந்தனர். காலப்போக்கில் தென்தமிழகக் கிராம சபைகளில் தமிழிசைக் கீர்த்தனை பாடல்கள் முக்கிய இடத்தைப் பிடித்தன. இப்பாடல்களைப் பெரும்பாலும் கிறிஸ்தவத் தமிழ் கவிஞர்களும், தமிழ் குருமார்களும், தமிழ் சபை ஊழியர்களும் இயற்றி இசை (மெட்டு) அமைத்து இருந்தனர். தஞ்சையில் வசித்த நெல்லையான் வேதநாயகம் சாஸ்திரியார் கன்னியாகுமரி மாவட்டம் மயிலாடியை சார்ந்த யோவான் பால்மர் ஆகியோரால் அதிக அளவு தமிழிசை கீர்த்தனை பாடல்கள் இயற்றப்பட்டிருந்தது.

தமிழிசை கீர்த்தனை பாடல் இயற்றிய S.P.G. மிஷன் சபை ஊழியர் திரு. மதுரநாயகம் மற்றும் தமிழிசை கைப்பிரதி பாடல்களை இயற்றிய C.M.S. மிஷன் சபை ஊழியர் S.A.J.தேவாசீர்வாதம் ஆகிய இருவரைக் குறித்தும் இருவரின் பாடல் ஊழியம், நற்செய்தி ஊழியம் குறித்தும் சுருக்கமாகக் காண்போம்.

### தமிழிசை கீர்த்தனை கவிஞர் மதுரநாயகம் உபதேசியார்

தூத்துக்குடி மாவட்டத்தில் உள்ள நாசரேத்தில் பிரதான முக்கந்தராக இருந்த கருப்பன் முக்கந்தர் அவர்களின் கொள்ளுப்பேரனாக, S.P.G. மிஷனின் புகழ் வாய்ந்த உபதேசியார் என்றழைக்கப்பட்ட K.சுவாமியடியான் உபதேசியார் - பாக்கியத்தம்மாள் தம்பதியரின் பேரனாக, K.S.ஏசுவடியான் உபதேசியார் - லெட்சுமி (எ) பாக்கியம் தம்பதியரின் மகனாக நாசரேத்தில் 29.05.1859 அன்று மதுரநாயகம் உபதேசியார் பிறந்தார். இவருக்கு வேதமுத்து சுவாமியடியான் எனும் அண்ணனும் தவமணி எனும் தங்கையும் இருந்தனர். ஆசிரியர் கல்வியிலும் உபதேசியார் பயிற்சி கல்வியிலும் தேர்ச்சி பெற்ற இவர்



திருமதி. கிருபைவரம் மதுரநாயகம் தமது பேரக் குழந்தைகளின் மத்தியில் அமர்ந்திருக்கும் காட்சி



நாசரேத் மிஷன் கல்லறை தோட்டத்தில் உள்ள திரு.மதுரநாயகம் உபதேசியார் & திருமதி. கிருபைவரம் அம்மாள் ஆகியோரின் கல்லறைகள்

அக்காலத்து S.P.G மிஷன் சபைகளில் பெரிய சபைகளில் ஒன்றான மூக்குப்பீரி சபை உபதேசியாராக நியமிக்கப்பட்டு அங்கு சிறப்புறப் பணி செய்தார். 1884 இல் நாசரேத்தைச் சேர்ந்த தேவசகாயம் உபதேசியார் - மரியம்மாள் நாடாச்சி தம்பதியரின் மூத்த மகளான கிருபைவரம் அம்மாளைத் திருமணம் செய்தார். இவர்களின் குடும்ப வாழ்வை ஆண்டவர் ஆசீர்வதித்து இவர்களுக்கு M.S. அப்பாத்துரை, செல்வம் சாமுவேல், இராவ் சாகிப் S.M.சாலமோன், நேசமணி சத்தியநாதன், M.S பாலசுந்தரம், M.D. டேனியல், என ஆறு பிள்ளைகளைத் தந்தார். சிறு சபையாக இருந்த மூக்குப்பீரி சபையை மிகப்பெரிய சபையாக மாற்றியவர் இவரது தாத்தா சுவாமியடியான் உபதேசியார் ஆவார்.

### கீர்த்தனைப் பாடல் இயற்றியது

பல ஆண்டுகள் மூக்குப்பீரியில் சிறப்புற ஊழியம் செய்த மதுரநாயகம் உபதேசியார் அதன் பின் 25.06.1918 இல் மரணமடையும் வரை S.P.G. மிஷனின் மற்றொரு பெரிய சபையான பிள்ளையன்மனை சபை ஊழியராகச் சிறப்பாகப் பணி செய்தார். இவரது சபை ஊழியப்பணிகள் இன்றளவும் இவ்விரு



திரு .J. தேவாசீர்வாதம் உபதேசியார் - ஞானதீபம் அம்மாள்

சபையாராலும் நினைவு கூறப்படுகின்றன. இசைஞானமும் ஊழிய ஆர்வமும் மிக்க இவரால் எதுகுலகாம் போதி இராகத்தில் ஆதிதாளத்தில் 'கிருபை புரிந்தென்னை ஆள்' எனும் அருமையான கீர்த்தனை பாடல் இயற்றப்பட்டது. இவரது வழிமரபினரின் குடும்ப நிகழ்வுகளில் அப்பாடல் பாடப்படுகிறது. இவரது கல்லறை நாசரேத் மிஷன் கல்லறை தோட்டத்தில் உள்ளது. தூத்துக்குடி - நாசரேத் திருமண்டலம் வெளியிட்டுள்ள முன்னோடி சபை ஊழியர்கள் வரலாற்று நூலில் இவரது வரலாறும் பாடல் இயற்றிய வரலாறும் குறிப்பிடப்பட்டுள்ளது.

### தமிழிசை கைப்பிரதி பாடல் கவிஞர் தேவாசீர்வாதம் உபதேசியார்

திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள கல்லிடைக்குறிச்சியில் மா.இசக்கிமுத்து-வடிவு தம்பதியரின் கொள்ளு பேரனாக, இ.சுவிசேஷமுத்து அய்யம்பெருமாள் - சூசன்னாள் தம்பதியரின் பேரனாக, யோவான் - பாக்கியம் எனும் பக்திமிக்க பெற்றோரின் மகனாக 22.09.1893 அன்று தேவாசீர்வாதம் உபதேசியார் பிறந்தார். இவருக்கு தாயம்மை எனும் அக்கா இருந்தார். தேவாசீர்வாதம் பிறந்ததும் பெற்றோர் இவரை ஊழியத்திற்கென அர்ப்பணித்தனர். இந்நிலையில் ஒன்றரை வயதில் இராஜபிளவை நோய் காரணமாக இவரது தந்தை மரணம் அடைந்தார். பக்திமிக்க விதவைத் தாயாரால் ஊழிய சிந்தையில் இவர் வளர்க்கப்பட்டார்.

### சுவிசேஷ பரப்புக் குழு பேண்ட் ஊழியத்தில் நற்செய்திப் பணி

1911 - 1917 வரை இடையன்குடி குருவானவராகவும் சுவிசேஷ பரப்புக் குழு பேண்ட் ஊழியத் தலைவராகவும் பணி செய்த Rev.G.H.லாம்ப் ஐயரவர்களின் கீழ் இவர் சுவிசேஷ ஊழியராகச் சேர்ந்தார். இவரை ஆண்டவருக்குள் வழிநடத்திய கனம்.G.H.லாம்ப் இவரை அதிகமாக நேசித்தார்.

### ஆசிரியர் கல்வி மற்றும் உபதேசியார் கல்வி

Rev.G.H.லாம்ப் ஐயரவர்களின் பணிமாறுதலுக்குப் பின் பிஷப் சார்ஜென்ட் ஆசிரியர் பயிற்சி பள்ளியில் இரண்டாண்டு ஆசிரியர் கல்வியும் (1917 - 1919), நாசரேத் திருமறையூர் வேதாகமக் கல்லூரியில் ஓராண்டு உபதேசியார் பயிற்சி கல்வியும் (1919 - 1920) கற்று தேர்ச்சி பெற்றார்.

### கருத்தப்பிள்ளையூரில் ஊழியம்

திருமணம் ஆகாத நிலையில் கருத்தப்பிள்ளையூரில் தலைமை ஆசிரியராகவும் சபை ஊழியராகவும் இவர் நியமனம் பெற்றார். கருணையாறு எனும் கடனாநதியின் தென்கரையில் உள்ள கருத்தப்பிள்ளையூரில் பல ஆண்டுகள் இவர் பணி செய்தார். அக்காலத்தில் அந்த ஆற்றில் இவரும் அந்த கிராமத்து மக்களும் ஓர் நாள் காலையில் குளித்துக் கொண்டிருந்தபோது பெருவெள்ளம் அந்த ஆற்றில் வருவதற்கான ஆண்டவரின் தரிசனத்தைப் பெற்ற இவர் உடனடியாக அதைத் தம்மோடு குளித்துக்கொண்டிருந்த அனைத்து மக்களுக்கும் தெரியப்படுத்தி கரையேறும்படி கூறினார். அனைவரும் உடனடியாக ஆற்றிலிருந்து வெளியேறினர் அனைவரும் வெளியேறிய ஒரு சில நிமிடங்களுக்குள் பெருவெள்ளம் ஆற்றில் வந்ததை அனைவரும் கண்ணார கண்டனர். தங்களைக் காத்த ஆண்டவருக்கு நன்றி செலுத்தினர்.

### சுவிசேஷப் பரப்புக் குழு பேண்ட் ஊழியத்தில் மீண்டும் பணி செய்தல்

இவர் மீண்டும் திருநெல்வேலி திருமண்டல சுவிசேஷ

பரப்பு குழு பேண்ட் ஊழியத்தில் சுவிசேஷ ஊழியராகச் சேர்ந்தார். பல ஆண்டுகள் சுவிசேஷ ஊழியராகப் பணி செய்தார். இரண்டு தடவைகளில் பத்து ஆண்டுகளுக்கு மேல் இவர் பேண்டு ஊழியத்தில் சுவிசேஷ ஊழியராக பணி செய்துள்ளார்.

### மீண்டும் கருத்தப்பிள்ளையூரில் சபை ஊழியர் மற்றும் தலைமை ஆசிரியர் பணி

இவரது வயதான தாயாரின் விருப்பம் மற்றும் கருத்தப்பிள்ளையூர் சபை மக்களின் தொடர் அழைப்பு காரணமாக கல்லிடைக்குறிச்சியில் இருந்து சுமார் 16 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள கருத்தபிள்ளையூரில் சபை ஊழியர் ஆகவும் தொடக்கப்பள்ளி தலைமை ஆசிரியராகவும் நியமனம் பெற்ற இவர் 1938 வரை பல ஆண்டுகள் அங்கு பணி செய்தார். இரண்டு தடவைகளாக கருத்தப்பிள்ளையூரில் பத்து ஆண்டுகளுக்கும் மேல் இவர் பணி செய்துள்ளார். இன்றளவும் அண்ணாவி தேவாசீர்வாதம் உபதேசியார் என கருத்தப்பிள்ளையூர் சபை மக்களால் இவர் நினைவு கூறப்படுகிறார். அதன்பின் ஆலங்குளம் கஸ்பா திருச்சபையில் ஒன்றரை ஆண்டுகள் (1938 - 1939) சபை ஊழியர் மற்றும் பள்ளியில் தலைமை ஆசிரியராகவும் பணி செய்தார்.

### சுவிசேஷபுரம் சர்க்கிளுக்கு பணிமாற்றமும் கைப்பிரதி பாடல்கள் இயற்றப்படுதலும்

இந்நிலையில் 1939 இல் சுவிசேஷபுரம் சர்க்கிளின் தலைமை இடமான சுவிசேஷபுரம் சபை ஊழியராக அங்குள்ள பள்ளி தலைமை ஆசிரியராக இவர் நியமனம் பெற்றார். அந்த இடத்தில் வைத்து இவரால் பல கைப்பிரதி பாடல்கள் இயற்றப்பட்டு இசையமைக்கப்பட்டது.

அவை சுவிசேஷபுரம் சபை ஜெபக்கூட்டங்களில் பாடப்பட்டது இன்றளவும் பாடப்படுகிறது. சுவிசேஷபுரம் சேகரத்தார் வெளியிட்டுள்ள புராதான பாடல்கள் என்ற பாடல் புத்தகத்தில் இவரது பல பாடல்கள் இடம் பெற்றுள்ளன அவை இன்றளவும் சுவிசேஷபுரம் சேர்ப்பின் பண்டிகையிலும் சுவிசேசபுரம் சர்க்கிளில் இருந்து பிரிந்து சென்ற புதிய சேகரங்களின் பண்டிகைகளிலும் பாடப்படுகின்றன. அப்பாடல்களில் தட்டு காணிக்கை படைக்கும் நிகழ்வின் போது பாடப்படும் முதல் பாடலான 'அன்னை மரி பாலா என்னை ஆதரிப்பாய் நீயே' எனும் புகழ்மிக்க இனிமையான பாடல் மிக முக்கியமான ஒன்றாகும். இப்பாடல் சுவிசேஷபுரம் மட்டுமல்லாது தெற்கு சபை மன்றத்தின் பல சேகரங்களிலும் பாடப்படுகிறது.

### தேவ தரிசனத்தின் படி திருமணம்

தேவ தரிசனம் கிடைத்தால் மட்டுமே திருமணம் செய்வது என உறுதியாக இருந்த தேவாசீர்வாதம் உபதேசியார். தமது நாற்பதாம் வயதில் யாக்கோபுவின் மகள் ஞானதீபத்தை திருமணம் செய் கொஞ்சம் பொறு என்ற தேவ தரிசனத்தை 1933 இல் பெற்றார். 18.01.1935 இல் இடைச்சிவிளை நல்லம்மாள்புரம் சபையைச் சார்ந்த யாக்கோபு - பாக்கியம் தம்பதியரின் மகள் ஞானதீபத்தைத் திருமணம் செய்தார். இத்தம்பதியரின் குடும்ப வாழ்வை ஆசீர்வதித்த ஆண்டவர் அவர்களுக்கு ஜான் டேவிட், ஜான் ஜேக்கப், ஜான் தேவராஜ் என மூன்று பிள்ளைகளைக் கொடுத்தார்.

### பஜனைப்பிரசங்க ஊழியம்

பெரும்பாலான பழைய ஏற்பாட்டு தேவதாசர்களின் வரலாறுகளை பஜனை பிரசங்கம் மூலமாக இவர் சிறப்பாக வெளிப்படுத்தினார். புகழ்வாய்ந்த சுவிசேஷபுரம் சேர்ப்பின் பண்டிகையில் பலமுறை பஜனை பிரசங்கம் செய்துள்ளார். அந்த பஜனை பிரசங்க வரலாறுகளில் தாம் இயற்றிய பாடல்களை இனிய குரலில் இவர் பாடுகிற இவருக்கு பிரசங்கியார் என்ற பெயர் சபை மக்களால் கொடுக்கப்பட்டது. சுவிசேஷபுரத்தைத் தொடர்ந்து இட்டமொழி சபையில் 6 ஆண்டுகளும் திசையன்விளை சமாரியா சபையில் 6 ஆண்டுகளும் இடைச்சிவிளை நல்லம்மாள்புரம் சபையில் இரண்டரை ஆண்டுகளும் மடத்தச்சம்பாடு சபையில் ஓராண்டும் சபை ஊழியராக தலைமை ஆசிரியராக இவர் பணி செய்தார். மடத்தச்சம்பாட்டில் தலைமை ஆசிரியர் பணியிலிருந்து ஓய்வு பெற்றார். ஆசிரியர் பணி நிறைவுக்குப்பின் ஓராண்டு உறுமன் குளத்திலும் அதன்பின் மூன்று ஆண்டுகள் இடையன்குடி தூய. திரித்துவ ஆலயத்தில் பெரிய உபதேசியார் எனும் சபை ஊழியர் பணியையும் செய்தார்கள் அதன்பின் ஓராண்டு கூடங்குளத்தில் சபை ஊழியராகப் பணி செய்தார்கள்.

### வயதான நிலையிலும் ஊழியம்

நிறைவாக 1960 - 1962 இல் டோனாவூருக்கு அருகிலுள்ள மாவடி நெருஞ்சிவிளை திருச்சபையில் சபை ஊழியராக பணி செய்த இவர் சபை ஊழியர் பணியில் இருந்து 1962 இல் பணி நிறைவு பெற்றார்கள். 1962 இல் சொந்த ஊரான கல்லிடைக்குறிச்சியில் குடியேறினார்கள் கல்லிடைக்குறிச்சி சபையில் பிரசங்கங்கள் செய்து சபை ஊழியருக்கு உறுதுணையாக இருந்தார்கள். தமது 78 ஆம் வயதில் 29.09.1971 இல் கர்த்தருடைய ராஜ்யத்துக்குள் பிரவேசித்தார்கள் கல்லிடைக்குறிச்சி மிஷன் கல்லறை தோட்டத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள். 1971 நவம்பர் மாத நற்போதகம் மாத இதழில் **'பொன்னகர் பயணம்'** என்ற தலைப்பில் ஒரு பக்க அளவில் இவரது வாழ்க்கை வரலாறும் ஊழியமும் சிறப்பாக குறிப்பிடப்பட்டிருந்தது.



# கீர்த்தனை கவிஞர் அருள்திரு. எஸ் .பரமானந்தம்

## வாழ்க்கை குறிப்பு



சுஜித் ரெக்ஸ்

இந்திய தேசத்திற்கு மிஷனெரி ஊழியம் செய்ய வெளிநாட்டிலிருந்து வந்தவர், உவாக்கர். இவர் தமிழகத்தின் தென்பகுதியில் பண்ணைவிளை என்ற ஊரில் இறைப்பணி ஆற்றினார். இவருக்கு உதவியாக இருந்தவர். பரமானந்தம் அவர்களாவார். இவர் 1873-செப்டம்பர் 8 அன்று சங்கரன்கோவில் அருகேயுள்ள பந்தல்புளி என்ற சிற்றூரில் பிறந்தார். இவரது பெற்றோர் இராமசுவாமி என்ற வஸ்தாதிபிள்ளை பேச்சியம்மாள் ஆகியோர். பரமானந்தம் திருமுழுக்கு பெறுவது வரையில் சங்கரபாண்டியன் என்ற பெயரைப் பெற்றிருப்பார்.

பரமானந்தத்தின் தந்தை ஜிம்னாசியம் கற்றுக் கொடுக்கும் ஆசிரியராக இருந்தார். ஆகவே பரமானந்தமும் ஜிம்னாஸ்டிக் விளையாட்டுக்களைக் கற்று முதல் வகுப்பில் தேறினார். இப்பணிகளினூடேயும் நற்செய்தியைப் பரப்பி வந்தார். எழுப்புதல் கூட்டங்கள் மூலமாக கர்த்தரின் நற்செய்தியை அறிவித்தார்.

1903-இல் பரமானந்தம் - சாராள் அம்மையாரை மணந்தார். இராயபுரம் சபையில் தம் ஊழியத்தை ஆரம்பித்த இவர், 1909-ஆம் ஆண்டு போதகராக அபிஷேகம் பண்ணப்பட்டார். பேசும் திறமை, எழுதும் திறமை, கீர்த்தனை இயற்றும் திறமை, ஆகியவற்றை ஒருங்கே பெற்றவர். இவரது கீர்த்தனைகளுள் 'எந்நாளுமே துதிப்பாய் என்ற பாடலை அறியாத கிறித்தவர்களே இல்லை. அந்த அளவுக்கு இது பெரும் புகழ் பெற்ற பாடலாக விளங்குகிறது.

'தந்தை தன் பிள்ளைகட்கு - தயவோடிரங்கானோ
தந்தை தன் பிள்ளைகட்கு
எந்த வேளை அவரோடு நீ தங்கினால்
சொந்தம் பாராட்டியே தூக்கிச் சுமப்பாரே' (21:6)

இயற்கையான, மனிதர் அனைவரும் அறிந்த நிகழ்வுகளைக் கொண்டு இவர் பாடல் இயற்றியுள்ளார். இதன் மூலம் இறைவனின் அன்பை விவரித்துள்ளார். கவிஞர். உலக வாழ்வின் நிலையாமையை உணர்த்துவதாக **'காலத்தின் அருமையை அறிந்து வாழாவிடில் கண்ணீர் விடுவாயே'** என்ற பாடல் அமைந்துள்ளது. திருமறையின் வரலாற்று நிகழ்வுகள் மூலமாக இதனை விவரித்துள்ளார்.

'நோவாவின் காலத்தில் நூற்றிருபது ஆண்டு
நோக்கிப்பின் அழித்தாரன்றோ?
தாவாத கிருபையால் தாங்கி உனக்களித்த
தவணையின் காலமிவ் வருட முடியலாமே' (241:3)

என ஆழ்ந்த கருத்துக்கள் நிறைந்ததாகவும், ஆத்தும வளர்ச்சிக்கு உறைவிடமாகவும் இவரது பாடல்கள் திகழ்கின்றன. கீர்த்தனைகளைத் தவிர சுவிசேஷப் பிரசங்கங்கள், கிறித்துவின் ஜீவியம், கிறித்துவின் சிந்தை, தேவனுடைய ஈவு ஆகியவற்றையும் படைத்துள்ளார். மேலும் இரட்சணியக் கீர்த்தனைகள் என்ற கீர்த்தனை நூலையும் இயற்றியுள்ளார்.

பரமானந்தம் தமது வாழ்வின் பல நிலைகளைக் குறித்து பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

'பிறந்தது சங்கரன் கோவில் பேச்சியம்மாளிடம்
வளர்ந்தது நாசரேத்தூர்
படித்தது மிடில் ஸ்கூல்
பார்த்தது ஜிம்னாஸ்டிக் வேலை
அடைந்தது முழு ஏமாற்றம்
கிடைத்தது தேவரட்சிப்பு
நிறைந்தது கிறித்துவின் அன்பு
நடந்தது ரட்சண்ய ஊழியம்
கண்டது மிகுதியான பலன்
கர்த்தருக்கே துதி ஸ்தோத்திரம்"

தம்முடைய வாழ்வில் காலத்தின் அருமையை உணர்ந்து வாழ்ந்த பரமானந்தம் பல நூற்களை கிறித்தவ உலகிற்கு ஈந்துள்ளார். இவர் 1960-மே 15 அன்று காலமானார்.

# கீர்த்தனை கவிஞர் ஜே. எஸ். கிறிஸ்மஸ் அடிகளார்

கிறிஸ்துவைப் பிரசங்கிப்பதிலும், சபையினரை ஏசுபிரானின் அடிச்சுவட்டினைப் பின்பற்றி வாழச் செய்வதிலும் இன்றுங்கூடப் பல பிரச்சனைகள் இருந்து கொண்டேயுள்ளன எனப் பல நற்செய்தித் தொண்டர்களும், போதகர்மாரும் குறிப்பிடுதலை நாம் மறக்க முடியாது! பிரச்சனைகள் எதுவும் இல்லாத காலம் ஒருபோதும் இராது. சமுத்திரத்தில் அலைகள் ஒருபோதுமே ஓயப்போவதில்லை என்பதனை இத்தகைய கூற்றுக்களுக்கு ஏற்ற மாறுத்தரமாக நாம் எடுத்துக் கொள்ளலாம். கல்வியறிவும், விஞ்ஞான வசதிகளும், சமயங்களிடையே புரிந்துணர்வுகளும் மிகுந்த இக்காலகட்டத்திலேயே 'இவ்வாறான' தரவுகள் கிறிஸ்தவ திருச்சபையைப் பற்றியிருக்குமாயின் 200 ஆண்டுகளுக்கு முன்னர், யாழ்ப்பாணத்து வண்ணார் பண்ணையிலே சைவவேளாண் குடும்பத்திலே பிறந்து, அவ்வூரிலுள்ள உவெஸ்லியன் மிஷன் பாடசாலையிலும், பின்னர் வட்டுக்கோட்டை அமெரிக்கன் மிஷன் செமினரியிலும் கல்விகற்று, 1839 ஆம் வருடம் கிறிஸ்தவ சபையைச் சேர்ந்த ஒருவரின் நிலைமை எவ்வாறிருந்திருக்கும் என்பதனை கற்பனை செய்தே முதலிற்கண்டு கொள்ளுதல் வேண்டும். பின்னரே அவரது யதார்த்த பூர்வமான கிறிஸ்தவ திருத்தொண்டையும், வாழ்க்கையையும் வரலாற்று உண்மைகளுடன் ஒப்பு நோக்கி உணர்ந்திடல் வேண்டும்.

**இராகம்: குரஞ்சி** **ஆதிதாளம்: பல்லவி**

உச்சித மோட்ச பட்டணம் போக
ஓடி நடப்போமே - அங்கே
உன்னத இயேசு மன்னவருண்டு, ஓயா இன்பமுண்டு! -

**சரணங்கள்**

நரகத்தின கோரம் மனதினிற்கண்டு
நாமதை நீக்கி விட்டோம் - மிகவும்,
நல்லவர் இயேசு அவரடி வாரும்
நற்கதி நீர் பெறுவீர்!- உச்சித

என்ற பாடலை இயற்றித்தந்துள்ள அருட் கவிஞர் ஜே. எஸ். கிறிஸ்மஸ் போதகர் அவர்களாவர். பாட்டுப் புத்தகத்தில் இவரது இப்பாடல் ஒன்றே இப்பொழுது சேர்க்கப்பட்டிருந்தாலும் அஃது மிகச் சிறந்த பக்தி நயம் பயப்பதாகும்!

இப்பாடலின் இருபத்து மூன்றுவரிகளில், பல்லவி, சரணங்கள் என இரு பகுதியாகக் கர்நாடக இசைக்கமைய எழுதப்பட்ட இக்கீர்த்தனையின் - நயத்தை நாமனுபவிப்பது பேரின்பம் பயக்கின்றது.

கிறிஸ்மஸ் போதகருடைய குடும்பம் பெரியது. அவருக்கு நான்கு ஆண்களும், நான்கு பெண்களுமாக எண்மர் சகோதர, சகோதரிகளாக வாய்த்திருந்தனர். வட்டுக் கோட்டைச் செமினரியில் ஏழு ஆண்டுகள் கற்று அரங்கேறிய பின்னர். இவர் உடுவில் அமெரிக்கன் மிஷன் செமினரியில் இரு ஆண்டுகள் எழுதுவினைஞராகவும், கண்டி கொழும்பு ஆதியாமிடங்களில் பதினொரு ஆண்டுகள் அரச உத்தியோகத்தராகவும் கடமையாற்றினார். இக்காலத்தில் இவரது ஆன்மீக, உலகியல் வாழ்க்கையைப் பரிசோதிக்கும் பல சம்பவங்கள் நடைபெற்றன. 1844-1850 வருடங்களில் இவர் கொழும்பில் கடமை யாற்றியபோது பெரும் பொருள் சம்பாதித்தார். குதிரைகளும், வண்டிகளும், பல்லக்குகளும் உடையவரானார். தமக்குகந்தவொரு சைவப் பெண்ணையே திருமணஞ் செய்து கொண்டார். எனினும் இளமையில் தான்கற்ற வேதசத்தியங்களை மறந்து விடுவது இவருக்கு இலகுவாக இருக்கவில்லை. இடையிடையே கிறிஸ்தவ திருமறையைத் தமது மன ஆறுதலுக்காகப்படிப்பதுடன், தமது மனைவிக்கும் எடுத்துரைத்து வந்தார். இடையில் இவர் கண்டிக்குச் செல்ல நேர்ந்தது. கொழும்பிலும், கண்டியிலும் இவருடைய மேலதிகாரிகளாக இருந்த ஆங்கிலேயர்களுடன் இவரால் ஒத்துப்போக முடியவில்லை. அவர்கள் எப்பொழுதும் இவரைப் பற்றித்தம் மேலதிகாரிகளுக்குப் பொய்யான அறிக்கைகளைக்' கொடுத்து இவர் மனம் பேதலிக்கச் செய்து வந்தனர். இச் செயல்களால் இவர் தாம் வகித்து வந்த அரச பதவியினைத் துறந்து விடவும் நினைத்தார். அன்றியும் இயேசு பெருமானின் திருவவதாரத்தைப்பற்றியும், அவர் ஏன் இம் மண்ணுலகிற்கு வந்து தம்மைச் சிலுவையில் அறையும்படி செய்ய வேண்டும் என்றும் சந்தேகங் கொண்டார்.



ஆனாலும் வேதப்புத்தகத்தை வாசிப்பதனை அவர் நிறுத்தவில்லை. நாளாக, நாளாகப் பிரச்சனைகள் அவரைச் சூழ்ந்து நெருக்கத் தொடங்கின. மாலை நேரத்தில் தன்னந்தனியராக, ஒரு மலையடிவாரத்திற்குச் சென்று கிறிஸ்தவ திருமறையை வாசித்துப் பிரார்த்தனை செய்யத் தொடங்கினார். இவ்வாறான ஒரு மாலைத்தியானித்தலின் போது' - பவுல் அடிகளார் எழுதிய 'அவரே மெய்யான இரட்சகர் ...... என்னும் தேவவாக்கை வாசித்துக்

கொண்டிருக்கும் போது, தூய ஆவியானவரின் அருள் அவரைச் சூழ்ந்து கொண்டது. அவர் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் தாரையாக ஓடியது. கிறிஸ்துவே மெய்யான இரட்சகர் என்று முழு இருதயத்தோடும் விசுவாசித்து தம்மை அக்கணத்திலேயே ஆண்டவரின் அடியானாக ஒப்புக் கொடுத்தார்!

அதன் பின்னர் அவர் தம் இல்லத்திலும், வெளியிலும் ஏசுபிரானைப்பற்றிப் பகிரங்கமாகவே பிரசங்கிக்கத் தொடங்கினார். ஒழுங்கான குடும்ப ஜெபக்கூட்டங்களை நடத்தினார். அவற்றுக்குத் தம் நண்பர்களையும் அழைத்து அவர்களுக்கும் ஏசுபிரானை எடுத்துரைத்தார். அப்போது கண்டிக்கு வந்திருந்த அவரது மனைவியின் தம்பியாருக்கும் இயேசு பெருமானைப் பற்றிப் போதித்தார். ஆறு மாத காலம் கண்டியில் தங்கியிருந்த போதகரின் மைத்துனர் யாழ்ப்பாணம் திரும்பும்போது பூரணமான கிறிஸ்தவராக வந்து சேர்ந்தார். இவையெல்லாம் கேள்வியுற்ற போதகரின் மனைவியின் தாயார் கோபித்துச் சினந்தெழுந்து, போதகரை மட்டுமல்ல, அவரை மருகராகத் தேடிக் கொண்ட, தன் கணவனையே ஆவேசமாகப்பேசித் தீர்த்தார். ஆனாலும் சில நாள்களுக்குள் வாந்திபேதி என்னும் நோய்க்கு அவள் இரையானாள், போதகரின் மைத்துனரும் தனது தாயார் இறந்த இரண்டு மாத காலத்துள் கசரோகத்துக்கு இரையாகினர். எனினும் அவர் இறக்கும் வரை தாங்கொண்டிருந்த தேவ விசுவாசத்தை நெகிழவிடவில்லை போதகரின் மனைவியும், தனது தம்பியார் மரித்துச் சில நாள்களுக்குள்ளேயே தமது இரண்டாங் குழந்தையைப் பிரசவித்த துன்பத்தினால் மரித்தார். அவரும் இறக்கும் வரை கிறிஸ்தவராகவே இருந்து மறைந்தார்.

இந்நிகழ்வுகளின் பின் போதகருக்கு மேலும் பல நெருக்கடிகள் நேர்ந்தன. அவர் நம்பியிருந்த சில அரச ஊழியர்களால் தமது கைப்பொருள்களையே அரசுக்கு இறுக்க நேர்ந்தது. அதனால் தாம் வகித்து வந்த பதவியைத் துறந்து, தம் மகனுடன் யாழ்ப்பாணம் வந்து சேர்ந்தார்.

1855-ம் வருடத்தில் சர்ச் மிஷனரிப் சங்கத்தினரின் கீழ் இரட்சகரைப் பிரசங்கிக்கும் வேலையைத் தேர்ந்து கொண்டார். 1855-64 வரையுள்ள ஆண்டுகளில் சுண்டிக்குளி, முகமாலை, நல்லூர், வேலணை ஆதியாமிடங்களில் அவர். திருத்தொண்டு புரிந்தார்.

1858-ல் போதகர் மறுமணம் புரிந்துகொண்டார். அப்பொழுது அவருக்கு இல்வாழ்க்கைத் துணைவியாக வாய்த்தவர், அவரது நெருங்கிய நண்பராக விளங்கிய போதகர் அங்கிற்றெல் அவர்களின் மைத்துளியும், உடுவில் மகளிர் கல்லூரியில் மிகப்பிரபல்யம் பெற்று விளங்கியவருமான யூவியா சிவநாமன்ம்மாள் என்பவராவர். இவர் போதகர், கிறிஸ்மஸ் அவர்களுக்குற்ற உயிர்த் துணைவியும், அவரது முதல் தாரத்து மகனான சாமுவேல், கனகரத்தினத்திற்குப் பெற்ற தாய்போலும் விளங்கினார். இவர் 1854-ல் 'அமெரிக்க மிஷன்' ஊழியரானார்.

போதகர் வேலணையில் திருமறை ஊழியஞ் செய்து வரும் காலத்தில், வட்டுக்கோட்டையில் படித்துக் கல்வியிலும் பக்திநெறியிலும் மிகபர்த்வினயே கனகரத்தினம் என்னும் அப்பிள்ளையைக் தேவன் பதிநான்கு வயதில் தம்மோடு சேர்த்துக்கொண்டார். அக் காலத்தில் நிலவிய வாந்திபேதி நோயும், அதனைப் பொருட்படுத்தாது, அந்நோயினால் பிடிக்கப் பட்டிருந்தவர்களுக்கு இப்பிள்ளை வீடு, வீடாகச் சென்று மருந்து விநியோகித்துப் பணிசெய்து வந்ததுமே அவரது சடுதியான மறைவுக்குக் காலாயிற்று! வேலணையில் போதகர் 1864 - 73 ஆண்டுகளில் பணிபுரிந்தார். அங்கிருந்து சாவகச் சேரிக்குப் பிரசங்கியாக அனுப்பப்பட்டார். அங்குதான் வண. டி. ரீமர் என்னும் மிஷனரியின் வேண்டுகோளுக்கமைய 1876 - 05 - 15ம் சபைக் குருவாக அபிஷேகம் செய்யப்பெற்றார். சாவகச்சேரியில் 1873 - 81 ஆண்டுகளில் மிக ஊக்கமான தேவ ஊழியம் செய்தபின்னர் தெல்லிப்பழைச் சபைக் குருவாக 1881 இல் இடமாற்றம் பெற்றார். இச்சபையில் இருபத்து நான்கு ஆண்டுகள் உற்சாகமான தேவ ஊழியத்தை இயற்றிய பின்னர் 1904 ஆம் ஆண்டு ஓய்வு பெற்றுத் தமது சொந்த வீடு அமைந்துள்ள அராலியில் வசிக்க தொடங்கினார்.

போதகரின் இரண்டாம் திருமணத்தின் பயனாக மூன்று மகன்களுக்கும், ஐந்து மகள்களுக்கும் தத்தையரானார். ஐம்பது ஆண்டுகள் திருமறை ஊழியஞ்செய்த கிறிஸ்மஸ் போதகர் எந்தச்சபையில் கடமையாற்றினாலும் அவர் இருக்கும் இடம் 'பெத்தேல்' போன்று ஒளிருகின்றது என்று பாராட்டப்பட்டுள்ளது. சபையார் அனைவரும் அவரைத் 'தேவனோடு நடமாடும் பக்தன்' என்றே அழைப்பராம். அவர் தமது பிள்ளைகளின் மீது எத்தகைய பரிவும் பாசமும் கொண்டிருந்தாரோ அவ்வாறே திருச்சபையின் உறுப்பினர் ஒவ்வொருவர் மீதும் கருணை கொண்டிருந்தார். அவர், தமது முதல் மகன் கனகரத்தினம் தனது பதினான்காவது வயதில் மரணப்படுக்கையில் இருந்தபோது அனைப்பரிவுடன் பார்த்துக் கேட்ட கேள்வி "மகனே, மரணத்துக்கு நீ பயப்படுகிறாயா?" என்பது தான்! அதற்கு அவர் பிள்ளையோ, "எனக்கு மரிக்கப்பயமில்லை. மரித்த உடனே நான் என் இரட்சகர் சமுகம் போவேன்!" என்றாராம் உடனே போதகர் செபம் செய்ததாகவும், அப்பொழுது அவர்கள் இருந்த அறையில் மின்னல் போன்றதோர் காட்சி தோன்றியதாகவும், போதகர் செபத்தை நிறைவு செய்து தமது கண்களை விழித்துப் பார்த்தபோது மகனின் ஆவி பறந்து விட்டதைக் கண்டாராம்! இஃது போதகரதும், அவரைப் பின் பற்றியோரதும் உண்மையான பக்திநெறிக்கு ஒரு எடுத்துக்காட்டாகும் என்பதில் ஐயமேயில்லை !

கிறிஸ்மஸ் போதகர் தமது இளம் வயதிலேயே சகலவற்றிலும் உறுதிவாய்ந்தவராக விளங்கினார். மாணவனாக இருக்கும்போது எல்லாவகையான வியைாட்டுப் போட்டிகளிலும் கலந்துகொண்டார், தமது வாலிபப்பராயத்தில் தம்மை எதிர்த்து நின்ற சகலவற்றையும் துச்சமாக எதிர்த்துப் போராடினார். தமது சொந்த வாழ்க்கையில் ஏற்பட்ட இழப்புக்கள் அவரைக் கடுமையாகப் பாதித்தபோதும் தேவ கிருபையினால் அவற்றை எதிர்த்து நின்று வாகைசூடினார்.

இனிய கணவர், அருமையான அப்பா, ஒப்பற்ற சபைப்போதகர், ஈடிணையற்ற நற்செய்திப் பேச்சாளர், கிறிஸ்தவ அருட்கவிஞர் என்ற நிலைகளில் அவரை இன்றும் நாம் தரிசிக்கின்றோம்.

போதகர் கிறிஸ்மஸ் எனும் நாமந்தாங்கிய அவர், அதற்கமையவே 1904-ம் ஆண்டு, கிறிஸ்மஸ் தினத்திலேயே மறுமைக்குள் பிரவேசித்தார். அராலியூரில் அமைத்திருந்த தமது சொந்த வீட்டில் ! ...

**யாழ்ப்பாணத்து கிறிஸ்தவ கீர்த்தனை கவிஞர்கள் புத்தகத்திலிருந்து**

# கவிஞர்
## IRH
# ஞானதாசன்

பென்னி



ஐசக் ரிச்சாட் ஹாரிசன் அவர்கள் ஐ.ஆர்.எச். ஞானதாசன் என அனைவராலும் அழைக்கப்பட்டார். இவர் 1915- ஏப்ரல் 18-ஆம் நாள் பிறந்தார். கன்னியாகுமரி மாவட்டம் திட்டுவிளையைச் சார்ந்த இவரது பெற்றோர் ஈ. ஞானதாசன் - ஜெசி சார்லெட் தம்பதியர்.

ஐ.ஆர்.எச். ஞானதாசன் அவர்கள் தனது கல்வியை மயிலாடியிலும், நாகாகோயிலிலும் கற்றார். நாகர்கோயில் ஸ்காட் கிறிஸ்தவக் கல்லூரியில் இன்டர்மீடியட் படிப்பை முடித்தார். திருவனந்தபுரம் மகாராஜா கல்லூரியல் பி.ஏ. பட்டத்தை 1938-இல் பெற்றார். எம். ஏ. பட்டத்தை அமெரிக்காவிலுள்ள சிகாகோ பல்கலைக்கழகத்தில் முடித்தார். 1944-இல் செராம்பூர் பல்கலைக்கழகத்தில் பி.டி. படிப்பையும் முடித்தார்.

ஞானதாசன், நாகர்கோயிலைச் சார்ந்த ஜாய் அம்மையாரை 1945 ஏப்ரல் 13-இல் மணம் செய்தார். 1945- அக்டோபர் 14-இல் போதகராக அபிஷேகம் பண்ணப்பட்டார். இவ்விழா பரசுவைக்கல் சபையில் வைத்து நடைபெற்றது. போதகராக உயரவிளை, பரசுவைக்கல், நெய்யூர் போன்ற சபைகளில் பணியாற்றினார். தென்பிராந்திய சேகரத்துப் போதகராக 1958- ஆகஸ்டு 1- ஆம் நாள் நியமிக்கப்பட்டார்.

இறைப்பணியிலும், தனது வாழ்விலும் இவர் சிறப்பாகவும், உண்மையாகவும், நேர்மையாகவும் செயலாற்றினார். ஆகவே, கன்னியாகுமரிப் பேராயத்தின் முதல் பேராயராக 1959- டிசம்பர் 19-இல் பொறுப்பேற்றார். பேராயத்தை நன்முறையில் நடத்தி பெயரும், புகழும் அடையச் செய்தார். இதன் விளைவாக, 1972- பிப்ரவரி 16-ஆம் நாள் பிரதமப் பேராயராக அபிஷேகம் பண்ணப்பட்டார்.

தமிழிலும், ஆங்கிலத்திலும் சிறப்பாக அருளுரை ஆற்ற ஞானதாசன் அவர்கள் திறமைமிக்கவர். கீர்த்தனைக் கவிஞரான திட்டுர் தேசிகர் இவரது பாட்டனார். அவரைப் போன்றே பேராயரின் பல கீர்த்தனைகள் கிறிஸ்தவப் பாமாலையில் இடம்பெற்றுள்ளன. கிறித்துவையே தனது எல்லாமுமாகக் கொண்டுள்ள மனப்பாங்கு அவரது பாடல்களில் வெளிப்படுகின்றது.

'நானுன்னுள்ளும் நீ யென்னுள்ளும் ஆயிருப்போமே
வானும் பூவும் வாசமுற இசைந்திடல் ஆமே' (356:3)

இறைவனையும், அவரையும் பிரிக்கமுடியாதபடி அவரது அன்பு இருந்தது என்பதை இப்பாடல் விளக்குகின்றது. இவ்வாறு சிறப்பாகப் பணியாற்றிய இவர் உடல்நலக்குறைவால், 1973-ஜுலை 6-ஆம் நாள் மரணமடைந்தார்.



### கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் அன்பின் வாழ்த்துக்கள்

கர்த்தருடைய பெரிதான கிருபையினால் பழமையும் பெருமையும் பாரம்பரியமும் கொண்ட மெஞ்ஞானபுரம் பரிசுத்த பவுலின் ஆலயத்தின் 175 ஆலய பிரதிஷ்டை மற்றும் அசன பண்டிகையை முன்னிட்டு, 1977ம் ஆண்டு பேராசிரியர் அருட்திரு. தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயரவர்களால் எழுதப்பட்டு மெஞ்ஞானபுரம் சபையாரால் வெளியிடப்பட்ட மெஞ்ஞானபுரத்தின் சிற்பியான தென் நெல்லை அப்போஸ்தலர் ஜாண் தாமஸ் ஐயரின் வாழ்க்கை வரலாறு புத்தகம் நம்முடைய திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம் மூலமாக மறுபதிப்பு செய்து வெளியிடப்பட்டது. மெஞ்ஞானபுரம் பரி. பவுலின் ஆலய பொது மகமை சங்கம் மூலம் வெளியிடப்பட்ட இந்நூலை தென்னிந்திய திருச்சபை கன்னியாகுமரி திருமண்டல பேராயர் Rt. Rev. Dr. A. R. செல்லையா அவர்கள் ஜெபித்து பிரதிஷ்டை செய்து முதல் பிரதியை வழங்கி ஆசீர்வதித்தார். அருகில் துத்துக்குடி நாசரேத் திருமண்டல லே செயலர் திரு நீகர் பிரின்ஸ் கிப்ட்சன் மற்றும் முதல் பிரதியை பெற்றுக்கொண்ட சபையின் மூப்பர் திரு ஜாண் தாமஸ்.

இந்த புத்தகம் வெளிவர உதவி செய்த பரி. பவுலின் ஆலய பொது மகமை சங்க தலைவர், செயலர், பொருளாளர் உறுப்பினர்கள் அனைவாருக்கும் வரலாற்றுச் சங்கத்தின் நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம்.

வரும் நாட்களில் தொடர்ந்து இன்னும் பல வரலாற்றுப் புத்தகங்கள் வெளியிட இருக்கின்றன. தொடர்ந்து நம்முடைய வரலாற்று சங்கம் மூலம் நடைபெற்று வரும் பணிகளை உங்கள் ஜெபத்தினால் தாங்க நினைப்பூட்டுகிறோம்.

**கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்-திருநெல்வேலி**
**9176780001**

**திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் அன்பின் வாழ்த்துக்கள்.**

பூர்வ நாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்; உன் தகப்பனைக் கேள், அவன் உனக்கு அறிவிப்பான்; உன் மூப்பர்களைக் கேள், அவர்கள் உனக்குச் சொல்லுவார்கள். (உபாகமம் 32:7)

மோசே இஸ்ரவேல் ஜனங்களிடம் கூறும் போது **'பூர்வநாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்'** என்று கூறுகிறார். வரலாற்றின் பக்கங்களை நாம் திரும்பி பார்க்கும் போது, அநேக அனுபவங்களையும், பாடங்களையும் அவை நமக்கு கற்றுக் கொடுக்கின்றன.

பாதை தெரியாத நிலையில் இருக்கும் போது வரலாற்று சம்பவங்கள் நமக்கான பாதைகளை நமக்கு காட்டுகின்றன. (முன் நடந்ததே இப்பொழுதும் நடக்கிறது; இனி நடக்கப்போகிறதும் முன்னமே நடந்தது. (பிரசங்கி 3:15))

ஒவ்வொரு காலகட்டத்திலும் பல்வேறு வரலாற்று அறிஞர்கள் வரலாற்றை அதிக தியாகத்தோடும் அர்பணிப்போடும் தம் அடுத்த தலைமுறைக்கு மிகச் சிறந்த வழிகாட்டியாகவும் பொக்கிஷமாகவும் கொடுத்துள்ளனர். அதை போற்றுவதும் நம் அடுத்த தலைமுறையினருக்கு கொண்டு செல்வதும் நம் மேல் விழுந்த தலையாய கடமையாகும். அந்த அளப்பரிய பணியை செய்ய அர்பணிக்கப்பட்ட இயக்கங்களுள் திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கமும்** ஒன்று.

திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்கள் பலரின் அரும் பெரும் முயற்சியினால் தொடங்கப்பட்டது. நம்முடைய வரலாற்று சங்கத்தின் தரிசனத்தில், இறையியல் கல்லூரி மாணவர்கள் பலர் தன்னார்வத்தோடு தங்களையும் இணைத்து செயல்பட்டு வருகிறார்கள். மேலும் தமிழ்நாடு முழுவதும் உள்ள பல வரலாற்று ஆய்வாளர்களுடன் கைகோர்த்து இப்பணியைச் செய்து வருகின்றோம்.

ஒவ்வொரு காலகட்டத்திலும் ஆண்டவர் வரலாற்று காரியங்களைப் பதிவு செய்வதில் தமக்கு ஏற்ற இறைமக்களைப் பயன்படுத்துகிறார். வரலாற்றைப் பதிவு செய்வதில் பழைய ஏற்பாட்டில் மோசே, யோசுவா, எஸ்ரா ஆகியோரையும் புதிய ஏற்பாட்டில் நற்செய்தியாளர்கள் மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான், பேதுரு, பவுல் ஆகியோரையும் அதிகமாக பயன்படுத்தி உள்ளதை நாம் பார்க்கிறோம்.

கிறிஸ்தவ வரலாற்றை பதிவு செய்யும் இறைபணியில் நம்முடைய திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தையும் இறைவன் பயன்படுத்தவதை எண்ணி இறைவனுக்கு நன்றி செலுத்துகின்றோம்.

**நம் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் பத்து அம்ச செயல்திட்டத்தை நினைவுபடுத்துவதில் மகிழ்ச்சி அடைகின்றோம்.**

- தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் நீண்ட இடைவெளிக்கு பின்பு மீண்டும் ஒரு வரலாறு படைத்துத்துக் கொண்டு இருக்கும் மாத ஆய்விதழ் தான் **'கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்'**. கடந்த 2020ம் ஆண்டு ஜீன் மாதம் முதல் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு தலைப்பைக் கொண்டு பல்வேறு அரிய ஆய்வுக்கட்டுரைகளோடு மிக சிறப்பாக வெளி வந்து கொண்டிருக்கிறது. **மறைக்கப்பட்ட, மறந்த, மறைந்த** மிஷனரிகள் மற்றும் திருச்சபை வரலாறுகள், கள ஆய்வுகள், பல்வேறு அரிய வரலாற்று பொக்கிஷங்களுடன் தமிழகம் முழுவதும் தொடர்ந்து 1500 க்கு மேற்பட்டவாசகர்களுடன் வந்து கொண்டு இருக்கின்றது.
- காலவோட்டத்தில் அறுபட்டுக்கிடந்த இசைத் தமிழ் கண்ணிகளைத் தற்கால இசைத் தமிழ் உலகுக்குக் கோர்த்துக் கொடுத்த மாபெரும் இசைத் தமிழ் அறிஞர் தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் அவருடைய அளப்பரிய செயல்களை நினைவுகூறும் வகையில் **ஆபிரகாம் பண்டிதர் நினைவு மின்னனு ஆராய்ச்சி நூலகம்** நம்முடைய சங்கத்தின் சார்பில் ஏற்படுத்தப்படுள்ளது. ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகமானது தமிழ் கிறிஸ்தவ மின்னனு நூலகத்தில் **முதல் நூலகம்** என்ற சிறப்பைப் பெற்றது. இந்த நூலகமானது தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், தமிழ் கிறிஸ்தவ ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது. தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் ஒரு புதிய மைல்கல்லாகவும் அமையும். மேலும் அநேக புதிய தமிழ் கிறிஸ்தவ எழுத்தாளர்களை உருவாக்கவும், ஆராய்ச்சியாளர்களை உருவாக்கவும் இது உதவியாக இருக்கும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.
- வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த, மறுபதிப்பு செய்து வெளியிடப்படாத கிறிஸ்தவ மிஷனரிகளின் வாழ்க்கை வரலாறு புத்தகங்களை மறுபதிப்பு செய்து வருகின்றோம். குறிப்பாக நெல்லை திருமண்டல வரலாற்று அறிஞர் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களுடைய படைப்புகளை மறுபதிப்பு செய்து இன்றைய தலைமுறைகளுக்கு கொண்டு செல்லவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றோம். குறிப்பாக கடந்த ஆண்டு பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களின் வரலாற்று சிறப்புமிக்க புத்தகம் அனைத்தையும் மறுபதிப்பு செய்து வருகின்றோம்.

- நம்முடைய வரலாற்று சங்கமும் கிறிஸ்தவ ஆய்வு மற்றும் ஆவணப்படுத்து மையமும் இணைந்து **'புத்தக வனம்'** செயலி செயல்பட்டுக் கொண்டு இருக்கின்றது. இந்த செயலி தமிழகத்தில் முதல் முறையாக டிஜிட்டல் முறையில் கையடக்க வடிவில் புத்தகமாக முழு நூலகமாக உங்கள் கைகளில் கொடுத்துள்ளோம். இன்னும் பல ஆயிரம் புத்தகங்களை பதிவேற்றும் பணி நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது. மேலும் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் பெயரிலேயே **நினைவு புத்தக அங்காடி** ஒன்று ஏற்படுத்தப்பட்டுள்ளது.
- தமிழக வரலாற்றில் கிறிஸ்தவ மிஷனரிகளுடைய பங்கு குறிப்பிடத்தக்கது. அந்த மிஷனரிகள் பணி செய்த இடங்கள், அவர்களுடைய நினைவிடங்கள், தங்கியிருந்த இல்லங்கள், கல்லறைகள், வரலாற்று சிறப்புமிக்க ஆலயங்கள், இரத்த சாட்சிகளாக மரித்த மிஷனரிகள் பணி செய்த மற்றும் தங்களை இரத்த சாட்சியாக ஒப்புக்கொடுத்த இடங்களை தெளிவான முறையில் பார்வையிடவும், வெளியிடங்களிலிருந்து வரும் மக்களின் வசதிக்காகவும் **Mission Tourist Map** என்று செயலி உருவாக்கி அதன் மூலம் அவர்கள் தங்குமிடங்கள், வழித்தடங்கள் அடங்கிய மின்னியல் கையேடு அமைப்பது.
- வரலாற்றின் பக்கங்களில் மறைந்து கிடக்கும் கீர்த்தனை கவிஞர்கள், உபதேசிமார்கள், முன்னாள் குருமார்களுடைய வரலாற்று பொக்கிஷங்களை சேகரித்து வருகிறோம். மேலும் அவர்களுடைய வரலாற்று தகவல்கள், அவர்களால் உருவாக்கப்பட்ட திருச்சபைகள், கிறிஸ்தவ பாடல்கள் உருவாக்கம் பெற்ற வரலாறுகள், பாடல்களின் வரலாறுகளையும் சேகரித்து அதை மின்னியல் முறைக்கு மாற்றும் பணிகளையும் செய்து கொண்டு இருக்கின்றோம்.
- தமிழ் கிறிஸ்தவ பழைய புத்தகங்களை சேகரித்து மின்னியல் முறையில் ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகத்திலும், பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் நினைவு புத்தக அங்காடியிலும் பதிவேற்றம் செய்வதுடன் புத்தகங்களை தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் விதமாக ஒரு சிறந்த ஆய்வு நூலகம் அமைக்கவும் முயற்சிகளும் மேற்கொண்டு வருகிறோம்.
- மிஷனரிகளின் வாழ்க்கை வரலாற்று சம்பவங்களை அடிப்படையாக கொண்டு ஆவணப்படங்களை வெளியிடுவதற்கான முயற்சிகள் செய்து கொண்டு இருக்கிறோம். கர்த்தருக்கு சித்தமானால், வருகிற ஆண்டு ஒரு மிஷனரியின் வரலாற்றை ஆவணப்படமாக்க திட்டமிட்டிருக்கிறோம்.
- தங்களுடைய வசதியான வாழ்வை தியாகம் செய்து நம் நாட்டிற்கு வந்து கோதுமை மணிகளாய் விதைக்கப்பட்ட மிஷனரிகள் மற்றும் தன் சொந்த மக்களுக்காக தங்களையே அர்ப்பணித்த நம் இந்திய மிஷனரிகளின் நினைவிடங்கள் மற்றும் கல்லறைகளை கண்டறிவதுடன் திருச்சபையுடன் இணைந்து பராமரித்து அவர்களுடைய தியாகங்களை குறித்த விழிப்புணர்வை திருச்சபை மக்களுக்கு ஏற்படுத்த பணியாற்றி வருகிறோம்.
- வரலாற்று சங்கம் சார்பில் மிஷனரிகள் பயன்படுத்திய கலை பொருட்கள் மற்றும் புத்தகங்கள், பைபிள், சேகரித்து வரலாற்று **அருங்காட்சியகம்** அமைக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறோம். மிஷனரிகள் பயன்படுத்திய பொருட்களை சேகரித்து வருகிறோம்.
- திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் சார்பாக வரலாற்று **ஆய்வுக் கருத்தரங்கம்** நடத்துவது வரலாற்று கள ஆய்வு பயிற்சிக்கான Workshop நடத்தும் பணிகளை மேற்கொண்டு வருகிறோம். அதற்கான ஆயத்தப்பணிகள் நடந்துகொண்டிருக்கிறது.

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, கடந்த 2017ம் ஆண்டு அற்பமாக ஆரம்பிக்கப்பட்ட நம்முடைய திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** இது வரையிலும் பல்வேறு தடைகளையும், நெருக்கடிகளையும் கடந்து வந்திருக்கிறது. வரலாற்று ஆய்வாளர்கள், ஆசிரியர்கள், வாசகர்கள், நண்பர்கள், நலன்விரும்பிகள் ஆகியோருடைய இடைவிடா ஜெபத்தாலும், ஆதரவாலும், உதவியாலும் நம் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் தொடர்ந்து செயல்பட்டு வருகிறது. மேலும் நம்முடைய மாதாந்திர ஆய்விதழும் தடைகளின்றி வெளி வருகிறது. நம்முடைய கிறிஸ்தவ வரலாற்று சங்க செயல்பாடுகள் சிறப்பாக அமைய ஜெபத்தாலும், உடலுழைப்பாலும், பொருளாதார வழியிலும் உதவி வரும் அத்துணை நல்லுல்லங்களுக்கும் நன்றியினை தெரிவித்துக் கொள்கிறோம். தொடர்ந்து நாம் செயல்பட வேண்டிய தளங்கள் அநேகமுண்டு. இணைந்து செயல்பட அன்புடன் அழைக்கிறோம். வரலாற்று சங்கத்தின் ஓர் அங்கமாக வரலாற்றை அடுத்த தலைமுறைக்கு கொண்டு செல்லும் கருவியாவோம். சர்வ வல்லமை கொண்ட ஆண்டவரின் ஆயுதமாவோம்.

**Bank : Federal Bank**
**Name : Tinnevelly Christian Historical Society**
**A/c Number : 1748 0200 0036 84**
**IFSC Code : FDRL0001748**

christianhistorical@gmail.com

**சங்கத்தில் உறுப்பினராக இணைய**
**91767 80001**

christianhistoricalsociety.in/
**tchsportal.co.in**

# புத்தக அறிமுகம்




**ஆசிரியர்: நிவேதிதா லூயிஸ்**
**பதிப்பாளர் : கிழக்கு பதிப்பகம்**
**சென்னை, 2022**
**விலை: 1299/-**
**பக்கங்களின் எண்ணிக்கை : 1272**

தமிழ்நாட்டில், கிறிஸ்தவ வரலாறு புனித தாமஸ் காலத்திலிருந்தே தொடங்குவதாக நம்பப்படுகிறது. அது தொடர்ந்து பல்வேறு பிரிவுகளுடன் பரிணாம வளர்ச்சியடைந்து 17 ஆம் நூற்றாண்டிலிருந்து கிறிஸ்தவர்களின் எண்ணிக்கை அதிகரித்தது. எண்ணற்ற எதிர்ப்புகளையும் தடைகளையும் தாண்டி, சமூகமாவும் தனி நபர்களாகவும் கிறிஸ்தவத்திற்கு மக்கள் மதம் மாறினர். கடந்த நூறு ஆண்டுகளில், நம்பிக்கையின் வெளிப்பாடுகள் ஒருங்கிணைக்கப்பட்டு, வெவ்வேறு பிரிவுகளின் கீழ் கட்டமைக்கப்பட்டுள்ளன. இன்று கிறிஸ்தவர்களுக்கும் சரி மற்றவர்களுக்கும் சரி, அற்பமும் அதிசயமுமான ஆரம்பம் மறந்துபோயிருக்கலாம். கிறிஸ்தவ நம்பிக்கையையும் அதன் வரலாற்றையும் சிறிய வட்டத்திற்குள் அடைத்துவிட காலமும் சூழ்நிலைகளும் கூட காரணமாகிவிட்டன. இந்த குறுகிய வட்டத்தை விரிவுபடுத்தும் வண்ணம் எழுத்தாளர் நிவேதிதா லூயிஸ் **'அறியப்படாத கிறிஸ்தவம்'** என்ற தனது நூலில் எண்ணியில் அடங்கா தரவுகளைத் தொகுத்துள்ளார். கிறிஸ்தவ தேவாலயங்கள், நிறுவனங்கள் மற்றும் இல்லங்களுக்குச் சென்று மக்களிடம் பேசி, இந்த இடங்களின் வரலாறு, அவற்றைச் சுற்றியுள்ள கதைகள், சடங்குகள், நம்பிக்கைகள், கட்டிடக்கலை, நாட்டுப்புறவியல், தமிழ் இலக்கியம், நிகழ்த்து கலை, பாட்டு, இசை போன்றவற்றை ஆவணப்படுத்துவதன் மூலம் கடந்த காலத்தை நிகழ்காலத்துடன் இணைக்கிறார். இந்தத் தேடல் ஒரு கிறிஸ்தவ பிரிவினருக்கென்று மட்டுப்படுத்தப்படவில்லை - கத்தோலிக்க மற்றும் சீர்திருத்தக் கிறிஸ்தவர்கள், லூத்தரன்கள் மற்றும் இரட்சணியசேனை என பல பிரிவினரும் இந்நூலில் குறிப்பிடப்பட்டுள்ளனர். இது தேவாலயத் தலைவர்கள் மற்றும் வரலாற்றாசிரியர்களின் குரல்களை மட்டுமல்ல, பொது மக்கள் மற்றும் நம்பிக்கையின் பங்குதாரர்களின் குரலையும் ஆவணப்படுத்துகிறது. நல்லவை கெட்டவை என பலதரப்பட்ட அனுபவங்களும் புத்தகத்தில் இடம் பெறுகின்றன; அதனால் நடுநிலையோடு மத வரலாற்றைப் பற்றி சிந்திக்க இந்நூல் வாசகரை அழைக்கிறது.

தமிழ் நிலப்பரப்பும் மொழியும் கிறிஸ்தவ நம்பிக்கையை எவ்வாறு வடிவமைத்துள்ளன, வேற்று கலாச்சாரங்களிலிருந்து மக்களுக்கு அறிமுகப்படுத்தப்பட்ட நம்பிக்கையை மக்கள் எவ்வாறு ஏற்றுக்கொண்டனர்; தமிழ்நாட்டின் வரலாறை கிறிஸ்தவம் எப்படி மாற்றியது? இறுதியாக கிறிஸ்தவ வரலாறை தமிழ்நாட்டின் வரலாற்றிலிருந்து பிரித்து பார்க்க வேண்டுமா? இந்த கேள்விகளுக்கு மட்டுமல்ல… சமயம் சார்ந்த பழக்கவழக்கங்களைக் குறித்த புரிதலுக்கும் ஆசிரியரின் பயணத்தில் நாமும் இணைந்து பதில்களைக் கண்டறியலாம்.

இன்று தமிழகம் மற்றும் இந்தியா முழுவதும் உள்ள கிறிஸ்தவ சமூகம் எதிர்கொள்ளும் சிக்கல்களின் மத்தியில் இந்த புத்தகம் வெளியாகியுள்ளது. ஆசிரியரின் துணிச்சலுக்கும் தேடலுக்கும் அசாத்தியமான உழைப்பிற்கும் நன்றி கூறத்தான் வேண்டும்.

அட்டைபடத்தில் காணப்படுவது எளனாப்பட்டி உபகார மாதா மஞ்சுவிரட்டு காளை. அட்டையின் தண்டுப் பகுதியில் சீர்த்திருத்த திருச்சபையின் முதல் போதகரான மண்ணின் மைந்தன் ஆரோன். இப்புத்தகம் 2 பகுதிகளாக அச்சடிக்கப்பட்டுள்ளது.

**ரோடா அலெக்ஸ். சென்னை**

Owned & Published By TINNEVELLY CHRISTIAN HISTORICAL SOCIETY, Tamil Eduction- For Private Cirulation Only
Editor|G.MUTHAIAH SELVAKUMAR| at 2.2.3(4)North Street, Bungalow Surandai-627859. Tenkasi District Ph: 04633 290401